*Kumaraṉ*

*Āram 19, muttu 22*

*January 15, 1942*

Record no. 313

REGD. NO. M. 1823. 12 பக்கங்கள். KUMARAN WEEKLY.

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு ஹு 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் மாதப் பதிப்பும் சேர்ந்தது PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 19 | காரைக்குடி விஷு-ஹு தை-மீ 2-உ (15—1—42) | முத்து 22

## இந்தியாவுக்கும் பர்மாவுக்கும் சுதந்திரம் அளிக்கவேண்டும்

### கிழ்த்திசையில் வெற்றிபெறச் சிறந்த வழி

### ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியார் அறிக்கை

★

"இந்தியாவுக்கும் பர்மாவுக்கும் சுதந்திரம் அளித்து விடுங்கள்; உடனே அவ்விரு நாட்டினரும் போரில் குதிப்பர். அதன் மூலம் ஒரு படை வரிசை ஏற்பட்டு விடும்" என்று ஸ்ரீமான் ஸி. ராஜகோபாலாச்சாரியார் விடுத்துள்ள ஒரு அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார். அவர் மேலும் தமது அறிக்கையில் குறிப்பிட்டிருக்கும் முக்கிய விஷயங்கள் வருமாறு:—

பிரிட்டிஷ் விமான இலாகா மந்திரி ஸர் ஆர்ச்சிபால்ட் சிங்ளேர் லண்டனில் நடந்த விருந்தொன்றில் பேசுகையில், தூரக் கிழக்கு திசை சூழலைப் பற்றிக் குறிப்பிட்டார். இவ்வாறு அவர் கூறியிருப்பது பிரிட்டிஷ் போர் முறையின் அடிப்படையான பலவீனத்தைக் காட்டுகிறது. கிழக்குத் திசையில் எஞ்சியிருக்கும் சக்திகளை இதர நாடுகளில் சிதறடிக்க வேண்டுமென்பது ஒப்புக்கொள்ளப்படுகிறது. அதனால் ஏற்படும் குறையை வேறு வகையில் நிரப்ப வேண்டாமா? இதைப் பொது மக்களின் தேசபக்தியைக் கொண்டுதான் நிரப்ப வேண்டும். ஆகவே, அரசியல் துறையில் சமரசம் செய்துகொள்ள வேண்டியது அவசியமான முறையாகிறது.

இந்த நாடு தங்களுடையதே என்ற உணர்ச்சி பொது மக்களிடையே பரவி நின்று பரிணமிக்கும்படி செய்யப்பட்டால், அவர்களுடைய தேசபக்தியை எதிர்ப்பாக மாற்றினால், படையெடுத்து வருபவர்களின் வேலை சுலபமாக இராது. யுத்தத்தின் தற்போதைய கட்டத்தில் அனுஷ்டிக்கப்பட வேண்டிய உண்மையான போர் முறை இந்திய, பர்மிய மகா ஜனங்களுக்குச் சுதந்திர அந்தஸ்தை உடனே அளித்து விடுவது தான். இந் நெருக்கடியான சமயத்தில் அதனால் இரு நாடுகளுக்கும் பாதுகாப்பு பிறக்கும். கவர்னர்களும், கவர்னர் ஜெனரல்களும் தங்கள் தலைமை ஸ்தலங்களை மாற்றிக் கொள்ள வேண்டியிருக்கும் சமயத்தில் பொறுப்பு மகா ஜனங்களிடம் இருப்பது நல்லது. தங்களைப் பாதுகாத்துக் கொள்ளப் பிரஜைகளுக்கு உள்ள சக்தியையும் பொறுப்பையும், அவர்களிடமிருந்து பிடுங்கி விடுவதால் ஏற்படக் கூடிய சமாதானம் உருவானதல்ல. யுத்த அதிர்ச்சியை அதனால் தாங்க முடியாது.

இந்தியரும் பர்மியரும் இந்த நிலையில்தானிருக்கின்றனர். பகட்டான உடை அணிந்த சிப்பாய்கள் நாட்டைச் சுற்றித் திரிகிறார்கள். இதனால் வாஸ்தவமாகவே பாதுகாப்பு ஏற்பட்டிருப்பதாக ஜனங்கள் தவறுக என்னும்படி செய்யப்பட்டிருக்கிறது. ஜனங்களுக்கு இவர்களாலேயே அதிகத் திகில் ஏற்படுகிறது. நம்பிக்கை உணர்ச்சியைப் பரப்ப இவர்கள் ஏதும் செய்வதில்லை. மலேயாவில் தற்போது ஏற்பட்டுள்ள சூழல் நிலைமைதான் இந்தியாவிலும் காணப்படுகிறது. பிரிட்டிஷ் சர்க்காரின் பிடிவாதமே இதற்குக் காரணம். ஏக்கமடைந்து போய் நான் இந்த விஷயங்களையெல்லாம் எடுத்துச் சொல்லவில்லை. இந்திய மக்களுக்குச் செய்யவேண்டிய கடமையைத் தைரியமாகச் செய்தால் கிழ்த்திசை மக்களின் நம்பிக்கையைப் பெற இப்பொழுதுகூட முடியும்.

பிரிட்டனின் ரகசிய ஆயுதம் பிரிட்டனின் ஆயுதச் சாலையிலேயே இருக்கிறது. ஆனால் அது அதை உபயோகிக்காது. இந்தியாவையும் பர்மாவையும் மேலும் பிரிட்டன் அடக்கி ஆள வேண்டுமாயின், அது எப்படியாவது ஜப்பானுடன் சமாதானம் செய்து கொண்டே ஆகவேண்டும். இந்த நிலைமை பிரிட்டனுக்குப் பிடிக்கவில்லையென்றால், நாட்டைப் பாதுகாக்கும் பொறுப்பை நாட்டினரிடம் ஒப்படைக்கும் விவேகத்தைத் தவிர வேறு வழியில்லை. படை வரிசைக்கு அங்கு கரையே இல்லையென்கிறார் லின்லிதோ பிரபு. ஆனால், அத்தகைய வரிசையை ஏற்படுத்த அவரும், பிரிட்டனிலுள்ள அவரது நண்பர்களும் மறுக்கின்றனர். இந்தியர் தங்களுக்கிடையே சண்டை பிடித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று அவர்கள் சொல்லுகின்றனர். இது பெருத்த முட்டாள்தனம்; ராஜதந்திரமோ அன்றி தைரியமோ அல்லது போர் முறையோ அல்ல. இந்தியாவுக்கும், பர்மாவுக்கும் சுதந்திரமளித்தால் உடனே இரு நாட்டினரும் படை வரிசையில் குதித்து விடுவர்.

## இந்தியாவிற்குப் பணம் அனுப்ப

### இலங்கை சர்க்கார் கட்டுப்பாடு

இந்தியாவுக்கு இலங்கையிலிருந்து பணம் கொண்டு வருவது சம்பந்தமான விதிகளில் சில திருத்தங்கள் இலங்கை கெஜட்டில் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. போர்த்துக்கீஸ் இந்தியாவைத் தவிர்த்து இந்தியாவின் வேறெந்த பாகத்திற்கும் ஒரே தினத்தில் இந்திய கரன்ஸி நோட்டாகவோ, அல்லது இலங்கை கரன்ஸி நோட்டாகவோ ரூ. 500க்கு மேல் அனுப்பவோ கொண்டுவரவோ முடியாது.

சொந்தப் பிரயாணச் செலவுகளுக்காக இலங்கைக் கரன்ஸி நோட்டாகவோ, அல்லது இலங்கையல்லாத வேறெந்த நாட்டின் கரன்ஸி நோட்டாகவோ ரூ. 200க்கு மேல் கொண்டுவர முடியாது.

## மதுரையில் ஏ. ஆர். பி. ஏற்பாடு

மதுரை ஜில்லாவில் ஏ. ஆர். பி. ஏற்பாட்டை (விமானப் படையெடுப்பினின்றும் பாதுகாக்க) அமுலுக்குக் கொண்டு வரத்திட்டமிடப்பட்டிருக்கிறது. ஒரு போலீஸ் டிப்டி ஸுப்பிரண்டெண்ட் ஏ. ஆர். பி. ஆபீசராக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

## புதுக்கோட்டை சட்ட சபை

புதுக்கோட்டை சட்டசபையின் பட்ஜட் கூட்டம் மார்ச் 23-ந்தேதி ஆரம்பமாகி 6 நாள் நடக்கும். உத்யோகப்பற்றற்ற விஷயங்கட்காக ஒரு நாள் ஒதுக்கப்படும்.

## நெற்குப்பையில் தமிழ் இசைக் கூட்டம்

இவ்வூர் ஊழைக் கூடத்தின் முன்பாக 31-12-41 மாலை 5 மணிக்கு தமிழ்இசைக் கூட்டம் ஒன்று வித்வான் திரு. கருணையானந்தர் தலைமையில் நடைபெற்றது. திருவாளர்கள் ராம. சா. இராமனுதன் செட்டியார், எஸ். இலக்குமணப் பிள்ளை, ஊரியூர் நடராஜன் முதலிய அன்பர்கள் தமிழின் உயர்வு பற்றியும் தமிழ் இசையின் தேவைபற்றியும் விரிவாகப் பேசினார்கள். இசைவாணர்களான திரு. பனை. குமரப்பா, திரு. சே. சுந்தரப்பா இவர்களால் தமிழ்ப் பாடல்கள் பாடப்பட்டதின் பின் கீழ்க்கண்ட தீர்மானம் ஒன்று நிறைவேறியது: "தமிழ் இசையை வளர்க்கப் பாடுபடும்படியும், பெரும்பாலும் தமிழில் பாடும் வித்வான்களையே ஆதரிக்க வேண்டுமெனவும் இக்கூட்டம் தீர்மானிக்கிறது."

## எண்ணெய் சப்ளையை அழிக்க ஜெர்மனியர் சதி

மேற்கு இந்தியத் தீவுகளில் ஒன்றான சோண்டரீகாவில் வெஸ்ட் இந்தியா ஆயில் கம்பெனிக்குச் (ஸ்டாண்டார்டு ஆயில் கம்பெனியின் கிளை) சொந்தமான எண்ணெயை அழிக்க சதி செய்ததாக 50 ஜெர்மனியர் கைது செய்யப்பட்டிருக்கின்றனர். இவர்களுள் பல ஜெர்மன் வியாபாரிகளும் இருக்கின்றனராம்.

## கொழும்பின் ஜனத்தொகை

சமீபத்தில் எடுக்கப்பட்ட ஜனத்தொகைக் கணக்கின்படி கொழும்பில் மொத்தம் 3½ லட்சம் பேர் வசிப்பதாகத் தெரிகிறது.



## சென்னை சட்டசபைக் காங்கிரஸ் கட்சிக் கூட்டம்

### பர்தோலித் தீர்மானத்திற்கு ஆதரவு

சுமார் 1½ வருஷ காலத்திற்குப் பிறகு சென்னை சட்டசபைக் காங்கிரஸ் கட்சிக் கூட்டம் தியாகராய நகர் ஹிந்திப் பிரசார சபைக் கட்டிடத்தில் ஜனவரி 8-ந் தேதி நடைபெற்றது. பர்தோலித் தீர்மானத்தின் கருத்தை விளக்கி ஸ்ரீமான் ஸி. ராஜகோபாலாச்சாரியார் சுமார் 2 மணி நேரம் பேசினார். 1939 அக்டோபர் 26-ந் தேதி சென்னை சட்டசபை நிறைவேற்றிய தீர்மானத்தை வற்புறுத்தி ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. மலேயா பர்மா ஆகிய இடங்களில் யுத்தம் பரவியதால் யுத்தம் இந்தியாவின் எல்லைக்கு வந்துவிட்டதை யொட்டியும், இந்திய அரசியல் நெருக்கடியில் சமரசம் ஏற்படாததாலும், தேசமக்களிடையே பீதி ஏற்பட்டிருப்பதாலும் இந்திய ஜனப் பிரதிநிதிகள் அதிகாரம் ஏற்று வலிவில் பிரஜைகளின் சொத்து சுதந்திரங்களைக் காப்பாற்ற முன்வந்தால்தான் இந்த நிலையைத் தவிர்க்க முடியும் என்பதாக ஒரு தீர்மானம் நிறைவேறிற்று. டிசம்பர் 30-ந் தேதி பர்தோலியில் காங்கிரஸ் காரியக் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானத்தை ஆதரித்து, மற்றொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## பெட்ரோலில் கிரோஸின் கலப்போருக்கு சர்க்கார் எச்சரிக்கை

பெட்ரோல் சப்ளைக் கட்டுப்பாடு அமுலில் வந்திருப்பதால் சிலர் மோட்டார் எண்ணெயுடன் கிரோஸின் எண்ணெயையும் கலந்து விற்பதாக இந்திய சர்க்காருக்குத் தகவல் கிடைத்திருக்கிறது. அப்படிச் செய்வதால் ஷை கட்டுப்பாட்டுத் திட்டமே தவறி விடுமென்றும், அவ்விதம் உபயோகிக்கும் கிரோஸின் எண்ணெய்க்கும் கட்டணம் கொடுத்தாலன்றி அது கட்டுப்பாட்டுக்கு விரோதம் ஆகும் என்றும், ஷை காரியத்தைச் செய்வோர் கடுமையான தண்டனைக்கு உள்ளாவார்களென்றும் இந்திய சர்க்கார் எச்சரித்திருக்கின்றனர்.

## கல்கத்தாவில் விளக்கணைப்பு

கல்கத்தா நகரிலும், சுற்றுப்புறங்களிலும் உள்ள 18,000 காஸ் லைட்டுகளும், 6000 மின்சார விளக்குகளும் 8-ந் தேதி முதல் இரவு 1-மணிக்கு மேல் அணைக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. நடுராத்திரிக்கு மேல் நகரை இருள் மயமாக்கும் நோக்கத்துடன் இவ்வேற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

## நாய்கள், பூனைகள் கொல்லப்படுகின்றன

சிட்டகாங் முனிஸிபல் டவுன் எல்லையில் திரிந்து கொண்டிருக்கும் நாய்களையும் பூனைகளையும் கொல்லும்படி ஜில்லா மாஜிஸ்திரேட் உத்தரவிட்டிருக்கிறார். நகரில் ஏ. ஆர். பி. ஏற்பாடுகளை ஒட்டி இந்த உத்தரவு போடப்பட்டிருக்கிறதாம்.

## உத்தியோக மாற்றம்

ராமனுதபுரம் சபார்டினேட் ஜட்ஜ் ஸ்ரீ பி. வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் சிவகெங்கைக்கு மாற்றப்பட்டிருக்கிறார்.





## கோவையில் விமான நிலையம்

சென்னை சர்க்கார் 8-ந் தேதி வெளியிட்ட அறிக்கையில் சென்னை மாகாணத்தில் விமானங்கள் இறங்குவதற்கான இடங்கள் அமைப்பது, அவற்றைப் பராமரிப்பது ஆகியவற்றைப்பற்றி இந்திய சர்க்காருக்கு விக்ஞாபித்துக் கொள்ளப்பட்டிருக்கிறதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அவசரத்தை முன்னிட்டு கோவை நகரசபைக்குச் சொந்தமான ஒரு இடத்தை விமானம் இறங்குவதற்காக சர்க்கார் வாங்கி இருக்கிறார்கள்; இதன் கிரயம் ரூ 8410. ரூ 15,700 செலவில் ஷை இடத்தை விஸ்தரிப்பதற்கான திட்டம் ஒன்று தயாராகி வருகிறது. ஏற்கெனவே விஜயநகரம் ராஜாவுக்குச் சொந்தமான இடம் ஒன்றும் வாங்கப்பட்டிருக்கிறது. 1500 ரூ செலவில் இந்த இடம் ரிப்பேர் செய்யப்பட்டது. மேற்கண்ட இடங்களைப் பார்வையிடவும் மற்ற செலவுகளுக்குமாக ரூ2700 வேண்டியிருப்பதாக சர்க்கார் தெரிவிக்கிறார்கள். விமானச் செலவு சம்பந்தமாக இரண்டு இடங்களிலும் சேர்ந்து ரூ 28,200 தேவையாக விருக்கிறது. சென்னை சர்க்கார் செலவினங்களில் இது புதிதாகச் சேர்க்கப்பட்ட இனமாகும்.

## தீ. சொ. ராம. தர்ம ஆஸ்பத்திரி ராமச்சந்திரபுரம்

1941ல் சிகிச்சை பெற்றவர்களின் புள்ளி விவரங்களாவன: புதிதாக சிகிச்சை பெற்றவர் தொகை 9,919; மொத்தம் சிகிச்சை பெற்றவர் தொகை 24,589; தினசரி சராசரி 67 என்று அறிவிக்கப்படுகிறது.

இந்தூர் மகாராஜா சீன சர்க்காரின் யுத்தச் செலவுக்கு 50 ஆயிரம் ரூபாய் கொடுத்திருக்கிறார்.

## காங்கிரஸை விட்டு காந்திஜி விலகமாட்டார்

### மௌலானா ஆசாத் அறிக்கை

காங்கிரஸ் தலைவர் மௌலானா அபுல் கலாம் ஆஸாத் பர்தோலி தீர்மானத்தைப் பற்றியும் மகாத்மாவின் மனப்பான்மையைப் பற்றியும் ஜனவரி 8-ந்தேதி ஒரு அறிக்கை வெளியிட்டார். அதில், மகாத்மா காந்தி காங்கிரஸிலிருந்து விலகிவிட்டார் என்று சொல்வது முற்றிலும் தவறு என்றும், காங்கிரஸ் தலைமைப் பதவியிலிருந்து காந்திஜி விலகவோ, அல்லது காந்திஜியின் ஆலோசனையின்றி காங்கிரஸ் காரியங்களை நடத்தவோ இயலாது என்றும் குறிப்பிட்டிருக்கிறார். தற்சமயம் காங்கிரஸ் சார்பாக மகாத்மா சத்தியாக்கிரக இயக்கத்தை நடத்த விரும்பவில்லை என்பதுதான் பர்தோலித் தீர்மானத்தின் கருத்து என்று அவ்வறிக்கையில் அவர் விளக்கியிருக்கிறார்.

## விஞ்ஞானக் காங்கிரசுக்குப் பண்டித நேரு தலைவர்

தேசீயத் திட்டக் கமிட்டியின் தலைவர் பண்டித ஜவஹர்லால் நேரு 1943-ல் கூடப் போகும் இந்திய விஞ்ஞானக் காங்கிரசின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கிறார். அடுத்த வருஷம் ஜனவரி முதல் வாரத்தில் இந்தக் காங்கிரஸ் லட்சுமணபுரியில் கூடும்.

## டாக்காவில் தண்டப் போலீஸ்

டாக்காவில் சென்ற 9 மாதமாக வைக்கப்பட்டிருந்த அதிகப்படி போலீஸ் பந்தோபஸ்து ஜனவரி 9-ந் தேதியுடன் தீர்ந்து விட்டது. இதற்கான செலவு ரூ 3 லக்ஷம் ரூபாயையும் தண்டவரி மூலம் டாக்கா வாசிகளிடமிருந்து வசூலிக்க முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

## தமிழ்நாடு காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டம்

### பர்தோலித் தீர்மானத்துக்கு ஆதரவு

ஜனவரி 8-ந் தேதி காலை த. கா. கா. காரியக்கமிட்டிக் கூட்டம் சென்னை தேனாம்பேட்டை காங்கிரஸ் மாளிகையில் ஸ்ரீ காமராஜ நாடார் தலைமையில் நடைபெற்றது. 20 மெம்பர்களில் 15 பேர் ஆஜராகி இருந்தனர். விசேஷ அழைப்பின் பேரில் ஸ்ரீமான் ஸி. ராஜகோபாலாச்சாரியாரும் வந்திருந்தார். கமிட்டி நிறைவேற்றிய தீர்மானங்களாவன:—

(1) அ. இ. கா. காரியக் கமிட்டியின் பர்தோலி தீர்மானத்தையும், மகாத்மாஜியின் அறிக்கைகளையும் அனுசரித்து தற்போது நடந்து வரும் சத்தியாக்கிரகத்தை நிறுத்தி வைக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. (2) 31-12-41-ல் பர்தோலியில் கூடி காங்கிரஸ் காரியக்கமிட்டி நிறைவேற்றிய தீர்மானத்தை ஏகோபித்து வரவேற்கிறது. (3) பீதியையும், குழப்பத்தையும் தவிர்க்க பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்ய சகல காங்கிரஸ் கமிட்டிகளின் தலைவர்களுக்கும் அதிகாரம் அளிக்கிறது. (4) ஜில்லா ஆர்கனைசர்கள் தாங்கள் சேர்த்த காங்கிரஸ் அங்கத்தினர் சந்தா பணத்தில் மாகாணக் கமிட்டிக்கு அனுப்ப வேண்டிய பகுதித் தொகையை ஜனவரி 15-ந் தேதிக்குள் அனுப்பி வைக்கும்படி கோரப்படுகிறது. (5) ஜனவரி 15-ந் தேதி முதற்கொண்டு அந்தந்த ஜில்லாவிலும், தாலூகாவிலும் சத்தியாக்கிரக இயக்கத்திற்கு முன்னிருந்த கமிட்டிகளே மறுபடியும் பொறுப்பை ஏற்றுக்கொண்டு வேலை செய்ய வேண்டும். இதுவரை வேலை செய்து வந்த ஆர்கனைசர்கள் கமிட்டிகளில் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களாக இல்லாமல் இருந்தால், அவர்கள் விசேஷ அங்கத்தினர்களாக இருப்பார்கள்; மற்றும் அவர்கள் மறு தேர்தல் வரை கமிட்டி அங்கத்தினர்களாக இருப்பார்கள். (6) சத்தியாக்கிரக இயக்க காலத்தில் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவராகவும், காரியதரிசிகளாகவும் இருந்து வேலை பார்த்த ஜனுப் வி. எம். உபயதுல்லா, பி. எஸ். சங்கரன், கே. சுப்பிரமணியம் ஆகியோரைக் கமிட்டி பாராட்டுகிறது.

## திருநெல்வேலி ஜில்லா நெசவுத் தொழிலாளிகள்

நெல்லை ஜில்லாவில் பல வகுப்புகளையும் சேர்ந்த நெசவுத் தொழிலாளிகள் சுமார் 22,000 பேர் இருப்பதாயும், யுத்தம் காரணமாக, பர்மா மலாய் ஏற்றுமதி தடைப்பட்டு விட்டதாலும், நூல் விலை ஏறிவிட்டதாலும், இவர்களில் பெரும் பகுதியினர் வேலையில்லாது திண்டாடுகின்றனரென்றும், எனவே, 50 க்கு மேலுள்ள நம்பர் நூல்களையே ஆலைகள் செய்யும்படி சர்க்கார் உத்தரவிட வேண்டுமென்றும், குறைந்த விலைக்கு நூல் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்றும், யுத்தத் தேவைகளுக்கான துணிகளுக்குக் கைத்தறி நெசவாளர்களுக்கு ஆர்டர் கொடுக்க வேண்டுமென்றும் கோரி ஜில்லா மாஜிஸ்திரேட்டுக்கும், கூட்டுறவு சங்க ரெஜிஸ்திராருக்கும் விண்ணப்பம் அனுப்பப்பட்டிருக்கிறது.

## ரோமெய்ன் ரோலந்திடமிருந்து அனுதாபம்

காலஞ் சென்ற கவி சிரேஷ்டர் ஸ்ரீ ரவீந்திரநாத் தாகூரின் புதல்வருக்கு பிரான்சு தேசப் பெரியார் ரோமெய்ன் ரோலந்திடமிருந்து அனுதாபச் செய்தி ஒன்று ஒரு நண்பர் மூலம் கிடைத்திருக்கிறது. ரோமெய்ன் ரோலந்து இப்போது ஜெர்மானியர் ஆக்கிரமித்துக் கொண்ட பிரான்ஸில் இருக்கிறார்.

# சோவியத் ருஷ்யாவில் இலக்கியமும் கலையும்

ஸோவியத் ருஷ்யாவில் போதக் கல்வியானாலும் சரி, தொழிற் கல்வியானாலும் சரி ஆண்களும் பெண்களும் கற்றுக் கொள்வதற்கு எவ்வளவு வசதிகள் அளிக்கப்படுகின்றன; வேலையில்லாத் திண்டாட்டம் எவ்வாறு கல்விக்குத் தடையாக விற்கவில்லை யென்ற விஷயங்களை முன்னொரு கட்டுரையில் கண்டோம். அந்நாட்டில் புத்தகங்கள் என்னென்ன முறையில் வெளியிடப்படுகின்றன; அவற்றில் மக்கள் காட்டும் ஆதரவு முதலிய விஷயங்களைக் கீழே காணலாம்.

படிப்பதற்கு நல்ல வசதியிருப்பது காரணமாக ஜனங்களுக்கு வாசிப்பதில் அதிகப் பிரீதி யேற்பட்டு விட்டது. பத்திரிகைகளும் புத்தக வெளியீடுகளும் அதிகரித்ததற்கு இதுவே காரணம்.

ஜார் ஆட்சியில் 1912ல்தான் மிக அதிகமான புத்தகப் பிரதிகள் பிரசுரமாயின; அவ்வருஷம் வெளியான புத்தகப் பிரதிகளின் மொத்தத் தொகை பதின்மூன்று கோடி முப்பத்தாறு லட்சமாகும். 1938ல் ஸோவியத் ருஷ்யாவில் 70 கோடிப் பிரதிகள் பிரசுரிக்கப்பட்டன. மாஸ்கோவிலிருக்கும் சர்வதேசப் புத்தகப் பிரசுராலயம் பாடப் புத்தகங்கள், நவீனங்கள், கதைகள், தொழிற் கல்வி நூல்கள், மொழி பெயர்ப்புகள் ஆகியவற்றை மொத்தம் 85 பாஷைகளில் வெளியிடுகிறது.

புத்தகங்களுக்கு ருஷ்யர்கள் எவ்வளவு மதிப்புக் கொடுக்கிறார்கள் என்பதை, அவர்கள் அவற்றைப் பாதுகாக்கும் முறையிலிருந்து தெரிந்து கொள்ளலாம். மாஸ்கோவிலிருக்கும் லெனின் லைப்ரரியில் புத்தகப் பாண்களை ஒன்றன் பக்கம் ஒன்றாக அடுக்கிக் கொண்டே போனால், அவை கேம்பிரிட்ஜிலிருந்து லண்டன் வரையுள்ள தூரத்துக்குப் போகுமாம். அவ்வளவு விசாலமான இடத்தில் கணக்கற்ற புத்தகங்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தாலும், அந்தப் பெரிய மாளிகையின் எந்த மூலையிலிருக்கும் புத்தகத்தையும், கேட்டவுடன் எடுத்துக் கொடுத்து விட முடியுமாம். லைப்ரரிகளைப் பாதுகாப்பது, நிர்வகிப்பது போன்ற விஷயங்களை, அரசாங்கப் புத்தகசாலை அதிபர்கள் உலகம் முற்றும் சுற்றுப்பிரயாணம் செய்து, கண்டறிந்து தங்கள் முறைகளை அபிவிருத்தி செய்து திட்டப்படுத்திக்கொண்டார்களாம். இந்த லெனின் லைப்ராரியில் ஒரு கோடி இருபது லட்சம் புத்தகங்கள் இருக்கின்றன. நியூயார்க் லைப்ராரியிலோ பதினைந்து லட்சம் புத்தகங்களே இருக்கின்றன. இலக்கியம், சங்கீதம், எல்லாவற்றிற்கும் ருஷ்யர் பிற நாடுகளைக் கவனிக்காமலிருப்பதில்லை. ஸோவியத் கலைப் பண்பாட்டின் ஒரு பகுதியாகவே ஷேக்ஸ்பியரின் இலக்கியத்தைக் கருதுகிறார்கள். அந்தப் பேராசிரியர் பிறந்த நாட்டில் அவரது 375-வது வருடதினம் அனேகமாகக் கவனிக்கப்படாமலே போய்விட்டதென்னலாம்; ஆனால் ருஷ்யாவிலோ புத்தகம், பத்திரிகை, நாடகம் மூலமாகக் கொண்டாடப்பெற்றது. லட்சக்கணக்கான தொழிலாளர்களும் குடியானவர்களும் அந்த ஞாபகார்த்த தினத்தைக் கவுரவித்தார்கள். ஷேக்ஸ்பீயர் நாடகங்களை நடிக்கும் கலா ஸ்தாபனங்கள் பல அந்நாட்டில் இருக்கின்றன. மாஸ்கோவில் மட்டும், ஒரு ஷேக்ஸ்பீயர் நாடகத்தைக் கண்டுகளிக்க 2 லட்சம் பேர் கூடினராம். பல்வேறு மாகாணங்களிலும், அந்தந்த மாகாண மொழிகளில் ஷேக்ஸ்பீயரின் நாடகங்கள் மொழி பெயர்க்கப்பட்டு நடிக்கப்படுகின்றன.

வெளிநாட்டு ஆசிரியர்களது புத்தகங்கள் மொழி பெயர்க்கப்படுகின்றன. நாடகத்தைப் போன்று, நடனம், சங்கீதம், ஓவியம் முதலிய பல்வேறு கலைகளுக்கும் தனித்தனி ஸ்தாபனங்கள் இருக்கின்றன. புதிய புதிய கலா நிபுணர்களைத் தோற்றுவிப்பதும், வளர்ப்பதுமே இந்த ஸ்தாபனங்கள் செய்துவரும் வேலை.

ருஷ்யாவில் நாடகக் கலை மிகவும் அபிமானிக்கப்படுகிறது. வேறு எந்த தேசத்திலும் நாடகத்திற்கு அவ்வளவு ஆதரவு அளிக்கப்படுவதில்லை.

கலைப்பண்புள்ள மனிதர், கலாசாரமுள்ள வகுப்பினர் என்றெல்லாம் பிற நாடுகளிற் சொல்லப்படுகிறது. ஆனால் ஸோவியத் ருஷ்யாவில் அம்மாதிரி தனி வகுப்பினர் இல்லை; தனி வகுப்பினர் உண்டுபண்ணவும் உத்தேசிக்கப்படவில்லை. நாட்டு மக்கள் அனைவரும் கலாசாரத்தில் சிறப்புற வேண்டுமென்ற அஸ்திவாரத்தில் வேலை செய்யப்படுகிறது. இந்த லட்சியம் நிறைவேற எல்லோருக்கும் சம சந்தர்ப்பமும், சம சாவகாசமும், சமப் பாதுகாப்பும் அளிக்கப்படுகின்றன. கலை என்பது ஒரு குறுகிய கூட்டாத்தார்க்கே உகந்தது—ஏற்பட்டது என்ற நோக்கம் அங்கில்லை; அது தேசியச் சொத்து; அதனால் எல்லோருக்கும் பொதுவானது; எல்லோருக்கும் அதில் பங்குண்டு என்ற மனப்பான்மையே அங்கு நிலவுகிறது.

## கோதுமை, மாவு ஏற்றுமதிக்குத் தடை

ஜில்லா அதிகாரிகள் அனுமதியில்லாமல் பஞ்சாபிலிருந்து கோதுமையும், கோதுமை மாவும் ஏற்றுமதி செய்யக் கூடாதெனத் தடை செய்து பஞ்சாப் கவர்னர் ஓர் உத்தரவு பிறப்பித்திருக்கிறார்.

## அருப்புக்கோட்டை

### திரு. முத்துநாடார் அவர்களின் அறுபது ஆண்டு நிறைவு விழா.

அருப்புக்கோட்டை பிரபல வர்த்தகரும் 'நாடார் குலமித்திரன்' பத்திராதிபரும், சமூகப் பெரியாருமான உயர்திரு. சூ. ஆ. முத்து நாடார் அவர்களின் 60 ஆண்டு நிறைவுவிழாவை முன்னிட்டு 2—1—42 பகல் 12 மணிக்கு "சிவகாமி மாளிகை"யில் அரிய விருந்து நடந்தது. விருந்தில் உள்ளூர், வெளியூர்களிலிருந்து பல பிரபலஸ்தர்கள் கலந்து கொண்டார்கள்.

விருந்து முடிந்த பின் 3 மணிக்கு உயர்திரு. சூ. ஆ. முத்து நாடாரவர்கள் சேவையைப் பாராட்டியும், வாழ்த்தியும் தோழர்களான வி. வி. ராமசாமி, பெ. சி. சிதம்பர நாடார், அ. பெ. ரத்தினவேல் நாடார், சொ. ஆ. சொக்கலிங்க பாண்டியர், டி. கே. சுப்பிரமணியம் முதலியோர் பேசினார்கள். சென்னை ச. சு. சங்கரலிங்கக் கவிராயர் அவர்களும் உடுமலை முத்துச்சாமிக் கவிராயர் அவர்களின் குமாரரான பாலபண்டித அருணாசலம் அவர்களும் அனுப்பிய வாழ்த்துப் பத்திரங்கள் வாசிக்கப் பெற்றன. ச. சு. சர்க்கரைப் பாண்டியர் அவர்கள் இயற்றிய பாடல்களை மாணவர்கள் பாடினர். பலர் மலர்மாலைகளையும், ஜரிகை மாலைகளையும் சூட்டினர். பதிலுரையாக உயர்திரு. சூ. ஆ. முத்துநாடார் அவர்கள் விருந்தில் கலந்தவர்களுக்கும், வாழ்த்தியவர்களுக்கும் வணக்கம் செலுத்தி மாலையிட்டு, வாழ்த்துச்செய்தி அனுப்பியவர்களுக்கும் தமது வந்தனத்தைத் தெரிவித்து "பெரியார் ஈ. வெ. ராமசாமி அவர்களின் சீரிய கொள்கையை மேற்கொண்டவன் என்பதன் அறிகுறியாக அன்னாரின் திருஉருவமைந்த மோதிரம் ஒன்றை எனது அறுபது வருஷப் பூர்த்தி வைபவத்தில் அணிந்துகொண்டிருக்கிறேன்" என்று கூறும்போது பெரியார் ஈ. வெ. ராமசாமி அவர்கள் அனுப்பிய தந்தியும் வந்தது யாவரையும் மகிழச் செய்தது. மற்றும் பலர் அனுப்பிய கடிதங்களும் தந்திகளும் வாசிக்கப் பெற்று சந்தன தாம்பூலம் வழங்க வைபவம் இனிது நிறைவேறியது.











## பெட்ரோல் கட்டுப்பாடு

★

### சர்க்கார் விளக்கம்

இம்மாதம் முதல் தேதியிலிருந்து கூப்பன் யூனிட் பாதியாகக் குறைக்கப்பட்டது பற்றி சர்க்கார் வெளியிட்ட அறிக்கை சம்பந்தமாகச் சில தப்பபிப்பிராயங்கள் எழுந்தது குறித்து சென்னை சர்க்கார் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கின்றனர். அதில் கார் சொந்தக்காரர்களுக்கு முன் அளிக்கப்பட்ட பங்கிட்டைப் பாதியாகக் குறைக்க வேண்டுமென்பது தற்சமயம் அவசியம் இல்லை என்றும், முன்னைக் காட்டிலும் சிக்கனத்தைத் தீவிரமாகக் கையாள்வது அவசியம் என்றும், இம்மாகாணத்துக் கென்று ஒதுக்கப்பட்டிருக்கும் பெட்ரோலின் அளவைப் பொறுத்து தாராளமான முறையில் பெட்ரோலுக்காகக் கோரிவரும் மனுக்கள் கவனிக்கப்படும் என்றும், கார் சொந்தக்காரர்கள் பிரதேசக் கட்டுப்பாடு அதிகாரியிடம் தெரிவித்துக் கொண்டால் ஒவ்வொரு இனமும் அதனதன் தராதரத்தைப் பொறுத்து ஆலோசிக்கப்படும் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

### பெட்ரோல் செலவைக் குறைக்க

சென்னைக் கார்ப்பரேஷனையும், மாகாணத்திலுள்ள 32 முனிசிபாலிடிகளையும் சுகாதார வேலை தவிர இதர வேலைகளுக்கு உபயோகமாகும் தங்கள் மோட்டார் லாரிகளுக்குப் பதில் மாட்டு வண்டிகளை உபயோகிக்க முடியுமா என்று பார்க்கும்படி சர்க்கார் கேட்டிருப்பதாகத் தெரிகிறது.

## சைக்கிள் திருட்டு

சிராவயல் நாகூர் கனி ராவுத்தர் என்பவன் மணலூரிலும் பள்ளத்தூரிலுமாக இரண்டு ராலி சைக்கிள்களையும், காரைக்குடியில் ஒரு பி. எஸ். ஏ. சைக்கிளையும் திருடி அவைகளை செக்காலை ஷண்முகம் ஆசாரி வீட்டில் பிரித்து ஒவ்வொருபாகத்தையும்திருட்டுத்தனமாக விற்று வந்ததாகவும், ஷை ஆசாரியும் அவனுடன் கூட்டாக இருந்து ஷை காரியத்தைச் செய்துவந்ததாகவும், போலீஸார் உளவறிந்து ஷை இருவரையும் கைதுசெய்து ரிமாண்டில் வைத்திருக்கின்றனர். இரண்டு ராலி சைக்கில்களின் பூரா உறுப்புகளும், பி. எஸ். ஏ. சைக்கிளில் சில பாகங்கள் தவிர மற்றவையும் கைப்பற்றப்பட்டிருக்கின்றன.

## தையல் மிஷின் திருட்டு

காரைக்குடி மெ. மெ. வீதியிலிருக்கும் ஒரு ஆயுர்வேத வைத்தியரிடம் வேலைக்கிருந்த குமார நாயர் என்பவன் 16-8-41-ல் ஷை யாருடையப் தையல்மெஷின் ஒன்றைக்களவாடியதாகத் தகவல் தெரிவிக்கப்பட்டதன் மேல் காரைக்குடி போலீஸார் புலன் விசாரித்து, சிவகெங்கையில் ஜெயபாரதி ஸ்டோர்ஸில் ஷை மெஷினைக் கண்டுபிடித்து திருப்பத்தூர் தாலூக் மாஜிஸ்திரேட்கோர்ட்டில் ரிமாண்டில் வைத்திருக்கின்றனர். எதிரி இன்னும் தலைமறைவாகத் திரிகிறான் என்றும் போலீஸார் நடவடிக்கை எடுத்து வருவதாகவும் தெரிகிறது.

## கெய்ரோவிலுள்ள அச்சு நாட்டுக் கைதிகளின் தொகை

ஜனவரி 8-ந் தேதிவரை கெய்ரோவுக்குக் கொண்டு வரப்பட்ட அச்சு நாட்டுக் கைதிகளில் 5,500 ஜெர்மானியரும், 14,700 இத்தாலியரும் இருக்கின்றனர்.

## பினாங்கு நிகழ்ச்சிபற்றி விசாரணை

பினாங்கு நகரம் எதிரிகள் வசமாவதற்கு முன் எடுத்துக் கொள்ளப்பட்ட நடவடிக்கை சம்பந்தமான விசாரணை லார்டு சபையில் நடந்தது. அதுபற்றி லார்டு மாய்னே தெரிவிக்கும்போது பினாங்கில் பொருள்களுக்கு வெடி மருந்தோ தீயோ வைக்காமல் அழிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டதாகவும், இரும்பு அரண்கள் தவிர மற்றவை எல்லாம் அழிக்கப்பட்டதாகவும், பலத்த குண்டுவீச்சின் காரணமாக சிறிய 50 படகுகள் தவிர மற்ற கப்பல்கள் எல்லாம் வெளியேற்றப்பட்டதாகவும் குறிப்பிட்டார்.

மலேயாவிலுள்ள கிட்டா, டிரெங்கானு ஆகிய இடங்களையும், பர்மாவிலுள்ள ஷான் சமஸ்தானங்களையும் தாய்லாந்து பெற உத்தேசித்திருப்பதாக பாங்காக் ரேடியோ அறிவித்தது.

## ராமநாதபுரம் ஜில்லாவில் வெளிச்சக் கட்டுப்பாட்டுத் திட்டம்

### ஜில்லாக் கலக்டர் அறிக்கை

★

ராமநாதபுரம் ஜில்லாவில், காரைக்குடி, தேவகோட்டை, மானாமதுரை உள்பட மொத்தம் 8 முக்கிய பட்டணங்களில் ஜனவரி 10-ந் தேதி முதற் கொண்டு இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் 52-வது பிரிவுப்படி விளக்கு வெளிச்சக் கட்டுப்பாட்டுத் திட்டம் அமுலுக்குக் கொண்டு வரப்பட்டிருப்பதாக, ஜில்லாக் கலக்டர் ராவ் பகதூர் ஸி. திருவேங்கட முதலியார் அறிவித்திருக்கிறார். இந்த உத்தரவு ஜனவரி 9-ந்தேதி காரைக்குடியில் தண்டோரா மூலமும், மறு நாள் துண்டுப் பிரசுரம் மூலமும் பொது ஜனங்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. அதிகாரிகள் வெளியிட்டிருக்கும் துண்டுப் பிரசுரத்தில், வெளிச்சக்கட்டுப்பாட்டைஎப்படி அமுலுக்குக் கொண்டுவருவது, பொது ஜனங்கள் என்னென்ன முறைகளைக் கையாள வேண்டுமென்பவை விளக்கப்பட்டிருக்கின்றன. அதிற் கண்டுள்ள முக்கிய விஷயங்கள் வருமாறு:—

சாதாரணமாய் எண்ணெய் விளக்கிலிருந்தோ அல்லது மெழுகுதிரி விளக்கிலிருந்தோ தெரியக்கூடிய வெளிச்சத்தைக் காட்டிலும் அதிகமாய்ப் பிரகாசம் கொடுக்கக்கூடிய விளக்கை எந்தக் கட்டிடத்திலாவது, அந்தக் கட்டிடத்தைச் சுற்றியுள்ள இடத்திலாவது உபயோகிக்கக் கூடாது. அப்படி உபயோகிப்பதாயிருந்தால் ஷை விளக்கின் நேர் வெளிச்சமோ, அல்லது அதன் பிரதிபிம்பமோ அல்லது அதன் ஒளியோ அந்தக் கட்டிடத்தின் எந்தப்பக்கமிருந்து பார்த்தாலும் வெளியே தெரியாதபடி, ஷை விளக்கின் சாயை தெரியாதபடி மறைப்பதுடன் கனமாயுள்ள கறுப்பு நிறமாயுள்ள மூடிகள் போட்டும் வைக்கவேண்டும். கட்டிடங்களோ அல்லது அவைகளைச் சுற்றியுள்ள பாகங்களோ கடலை நேர் நோக்கியிருந்தால் ஷை இடங்களில் சாதாரண எண்ணெய் விளக்கிலிருந்தோ அல்லது மெழுகுவர்த்தி விளக்கிலிருந்தோ தெரியக்கூடிய வெளிச்சத்தைக் காட்டிலும் அதிகப் பிரகாசமுள்ள விளக்கை மேலே சொல்லியபடி கறுப்பு நிறமுள்ள மூடிபோட்டு வைத்தாலொழிய உபயோகிக்கக்கூடாது. அழகுக்கோ தெருக்களிலோ அல்லது பொதுவான இடங்களிலோ போடப்பட்டிருக்கும் பப்ளிக் லைட்டுகளின் பவரை, அங்கு நடமாடும் ஜனங்களுக்கும் போக்குவரத்து வண்டிகளின் பந்தோபஸ்துக்கும் இடைஞ்சலன்னியில் அந்த விளக்குகளின் வெளிச்சத்தை, ஜில்லா மாஜிஸ்திரேட்டின் அல்லது சப் டிவிஷனல் மாஜிஸ்திரேட்டின், தாலூகா மாஜிஸ்திரேட்டு, சப் மாஜிஸ்திரேட் அல்லது போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் அந்தஸ்துக்குக் குறையாத போலீஸ் உத்யோகஸ்தர்களின் திருப்திப்படி எவ்வளவு குறைக்க முடியுமோ அவ்வளவு குறைக்கவேண்டியது.

தெருவிலாவது அல்லது திறந்த இடத்திலாவது ஒரு எண்ணெய் விளக்கு அல்லது மெழுகுதிரி விளக்கைக் காட்டிலும் அதிக வெளிச்சம் கொடுக்கக்கூடிய விளக்கை வைக்கவாவது கொண்டு போகவாவது கூடாது. வாண வேடிக்கை முதலானவைகள் காண்பிக்கக்கூடாது.

பொது ஜனங்கள் எலக்டரிக் கை டார்ச்சுகளை உபயோகிக்கலாம். ஆனால் ஷை டார்ச்சு லைட்டுகளின் வெளிச்சம் வருகின்ற தலைப்பு ஒரு அங்குல விட்டத்திற்கு மேற்படாததாக இருப்பதுடன், அதன் வெளிச்சம் பத்திரிகைக் காகிதத்தாலாவது அல்லது அதற்கு சமமாக கனமுள்ள வேறு வஸ்துவினாலாவது மங்கலாகச் செய்யப்பட்டிருக்க வேண்டும். ஒரு அங்குல விட்டத்திற்கு மேற்பட்ட முகப்புள்ள டார்ச்சுகளின் வெளிச்சம் வருகின்ற கண்ணாடியின் பாகத்தைக் கறுப்புப் பெயிண்டிங்காலாவது அல்லது கறுப்புக் காகிதத்தினாலாவது மறைத்து வெளிச்சம் வரும் பாகம் ஒரு அங்குல விட்டமுள்ளதாகச் செய்யப்பட வேண்டும்.

சாதாரணமாக வண்டிகளுக்கு உபயோகப்படுத்தும் எண்ணெய் விளக்கினுடைய அல்லது மெழுகுதிரி விளக்கினுடைய வெளிச்சத்தைக் காட்டிலும் அதிக வெளிச்சம் கொடுக்கக்கூடிய விளக்கை வண்டிகளில் கொண்டுபோகவோ வைக்கவோ கூடாது. அதிக வெளிச்சம் கொடுக்கக் கூடிய விளக்குகளை உபயோகப்படுத்துவதாயிருந்தால் அவைகளின் வெளிச்சங்களைக் குறைத்து அவைகளின் வெளிச்சம் வெளியே தெரியாதபடி மறைக்க வேண்டும். மோட்டார் வண்டிகளில் கொண்டு போகப்பட்ட அல்லது உபயோகப்படுத்தப்பட்ட விளக்குகளையும் அடியிற்கண்டபடி மறைத்து வைக்க வேண்டும்: வெள்ளை நிறமுள்ள லைட்டுகளைத் தவிர மற்ற லைட்டுகளை லைசென்சு கொடுக்கும் அதிகாரிகளின் உத்திரவன்னியில் மோட்டார் வண்டிகளின் முகப்பில் கொண்டுபோகக் கூடாது.

முகப்பிலுள்ள விளக்குகளை இலேசாயுள்ள சாணிக்காகிதத்தால் பூராக் கண்ணாடியையும் மறைக்க வேண்டும். மற்றொரு காகிதத்தால் கண்ணாடியின் மேல்பாக விட்டத்தை மறைக்க வேண்டும். 36 வாட்டுகளுக்கு மேற்பட்ட பல்புகளை லைட்டுகளுக்கு உபயோகப்படுத்தக் கூடாது. மேலும் 6 வாட்டுகளுக்கு மேற்பட்டுள்ள பல்புகளை மோட்டார் வண்டிகளின் பக்கங்களிலோ அல்லது ஷை வண்டிகளின் பின்னாலுள்ள லைட்டுகளுக்கோ உபயோகப்படுத்தக் கூடாது. மேலே சொல்லப்பட்ட நிபந்தனைகளின்படி யாரேனும் விளக்குகளை உபயோகப்படுத்தவில்லை யென்று அதிகாரிகள் அபிப்பிராயப்பட்டால் ஷை அதிகாரிகள் ஷை நபர்களை லைட்டுகளை எடுத்துவிடவோ அல்லது அணைத்துவிடவோ உத்தரவிடலாம். இந்த உத்தரவு 1. அருப்புக் கோட்டை, 2. தேவகோட்டை, 3, காரைக்குடி., 4. மண்டபம்-தனுஷ்கோடி, 5. ராஜபாளையம், 6.ஸ்ரீவில்லிபுத்தூர், 7. விருதுநகர், 8. மானாமதுரை ஆகிய பட்டணங்களில் அமுலுக்குக் கொண்டுவரப்படும்.

## மிதவாதிகள் கோரிக்கைக்கு 'டைம்ஸ்' ஆதரவு

பிரதம மந்திரி மிஸ்டர் சர்ச்சிலுக்கு இந்திய மிதவாதிகள் அனுப்பிய கோரிக்கையை லண்டன் 'டைம்ஸ்' பத்திரிகை ஆதரித்து எழுதியிருக்கிறது. அதில் ஷை மிதவாதிகளின் கோரிக்கை நியாயமானதென்றும், இந்த நல்ல சந்தர்ப்பத்தை சர்ச்சில் பயன்படுத்திக்கொள்ள முன்வர வேண்டுமென்றும், தற்போது இந்திய அரசியல் அமைப்புப் பிரச்னையை ஒதுக்கி வைத்துவிட்டு ஜப்பானிய ஆக்ரமிப்பைத் தோற்கடிப்பதற்கான வழியை மேற்கொள்ள வேண்டியது அவசியம் என்றும் எழுதியிருக்கிறது.



## தமிழ்ப் பாட்டுக்களைச் சேகரிக்க

★

### சங்கீத நிபுணர்கள் கூட்டம்

அண்ணாமலை யூனிவர்ஸிட்டியின் ஆதரவில், ஜனவரி 23-ந்தேதி சங்கீத நிபுணர்களின் கூட்டமொன்று நடைபெறும். இப்போது கிடைக்கக் கூடிய தமிழ்ப் பாட்டுகள் அனைத்தையும் சேகரிப்பதும், அவற்றைப் பாட வேண்டிய முறையை நிர்ணயிப்பதுமே இந்தக் கூட்டத்தின் நோக்கம். சங்கீத வித்வான்களும், நிபுணர்களும் அழைக்கப்பட்டிருக்கின்றனர். கவி இயற்றுபவர்களும், வித்வான்களும் தம்முள் ஒரு கமிட்டி அமைத்து சுமார் ஏழு தினங்கள் கூடி இவ்வேலையை முடிவு செய்வார்கள் என்று எதிர்பார்க்கப்படுவதாக அண்ணாமலை யூனிவர்ஸிட்டி ரெஜிஸ்திரார் அறிவிக்கிறார்.

## இலங்கையிலிருந்து வெளியேற்ற மில்லை

இலங்கையிலிருந்து இப்போது இந்தியர் பொதுவாக வெளியேற வில்லை யென்றும், அப்படி வெளியேறுபவர் அதிகமாகக் குழந்தைகளும் பெண்களும் தான் என்றும் இலங்கைச் செய்தி கூறுகிறது.

## 'தற்காலிக' சர்க்கார் ஊழியருக்கு உபகாரச் சம்பளம்

சென்னை சர்க்கார் வெளியிட்ட 8-ந தேதிய கெஜட்டில் 10 முதல் 30 வருஷம் 'தற்காலிகமாக' வேலை செய்யும் சர்க்கார் சிப்பந்திகளுக்கு உபகாரச் சம்பளம் அளிப்பது பற்றி பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. 1941 ஏப்ரல் முதற் கொண்டு ஷையார்களுக்கு உபகாரச் சம்பளம் அளிக்க அனுமதிக்கப்பட்டது.

## புதுவயல் சீட்டாட்ட வழக்கு அப்பீலில் எதிரிகள் விடுதலை

புதுவயல் ஸ்ரீமான் சுப. சித. சுப்பிரமணியன் செட்டியார் பங்களா சீட்டாடும் பொது இடமென்றும், அதில் ஸ்ரீமான்கள் அரு. சுப்பையா செட்டியார்; வயி. ராம. அரு. ராமனாதன் செட்டியார், அள. வீர. வீரப்ப செட்டியார், கு. மு. சிதம்பரம் செட்டியார், அ. மு. வீர. வீரப்ப செட்டியார், வீர. அ. அண்ணாமலை செட்டியார், சுப. சித. சுப்பிரமணியன் செட்டியார் ஆகியவர்கள் சீட்டாடியதாகவும், பள்ளத்தூர் போலீசாரால் வழக்குத் தொடுக்கப்பட்டு— திருப்பத்தூர் உதவி சப்மாஜிஸ்ட்ரேட் அவர்களால் குற்றவாளிகளென்று, எதிரிகளுக்கு அபராதம் விதிக்கப்பட்டிருந்தது.

ஷை தீர்ப்பின் பேரில் எதிரிகள் தேவகோட்டை சப்டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட் அவர்கள் கோர்ட்டில் C. A. No 35 of 1941 ஆக அப்பீல் செய்ததில், எதிரிகள் குற்றவாளிகள் என்று ருஜுச் செய்வதற்கு பிராஸிகியூஷன் தரப்பில் விடப்பட்ட புதுவயல் மு. உ. வீரப்ப செட்டியாரின் சாக்ஷியம் நம்பத்தக்கதில்லை என்றும், எதிரிகள் குற்றம் செய்ததாக வேறு யாதொரு ருஜுவும் கிடையாதென்றும், தீர்மானித்து, எதிரிகள் குற்றவாளிகள் இல்லை என்றும், எதிரிகளிடமிருந்து கைப்பற்றப்பட்ட சாமான்களையும் பணங்களையும், வசூலிக்கப்பட்ட அபராதத் தொகைகளையும் வாபஸ் கொடுக்கும்படியாகவும் 31-12-41ல் தீர்ப்புக் கூறி இருக்கிறார்கள் என்று தெரிகிறது.

# குமரன்

காரைக்குடி
விஷு-ஷூ தை-மீ 2உ

## பொங்கல்

போங்கல் வழக்கம்போல் தைமாதம் முதல் தேதி வந்துவிட்டது. பொங்கற் புதுநாள் ஹிந்துக்களின் விழா—தமிழர்களின் விழா என்று கூறுவதற்குத் தடையில்லை. பொங்கல் தமிழ் நாட்டுக்கே உரியதென்று கூறினும் அது மிகையன்று. பயிர் செழித்து அறுவடை கூட ஆகிப் புது அரிசியைப் புதுப் பானையில் போட்டுப் பொங்கியுண்ணும் புத்தாண்டு விழாவாக இது பொலிகிறது. பானைச் சோறுண்டு பாற்பசுக்கட்கு விழா வயர்ந்து களிக்கும் பெருநாள் இந்நாள். "விண்ணிழியுந் தாரையெனக் கோக்களெல்லாம் விரும்பு மட்டும் பால் சொரியச் சிறுவரெல்லாம் அண்ணுந்து மகிழ்ந்தருந்தி வளரும் நாடு" அல்லவா இது? மக்கட்கும் பசுக்கட்கும் பெரு விழாவாக இது நடைபெற்று வருகிறது.

ஆனல் இன்று யுத்தமேகம் சூழ்ந்து உலகைத் துயரக் கடலில் மிதக்க விடுவதாக இருக்கிறது. எங்கும் குண்டு மாரி. எங்கும் ரணகளம். எங்கும் ரத்தக் களரி. பிணக்குவியல். இரக்கம் மறைகிறது. கொடுமை ஆட்சி புரிகிறது. ஐரோப்பாவில் பிணம் விழாத இடமே இல்லை. ஆசியாவில் சைனு முதல் இந்தியா வரை சாவு. மேற்கே இராக் வரையும் வந்து நிற்கிறது. ஆப்ரிக்காவில் நித்தியக் கொலை. இப்படி உலக மக்கள் யாவரும் துயர்க் கடலில் கிடந்து தவிக்கின்றனர். இது ஓயும் வழி தெரியவில்லை. இந்த சமயத்தில் பொங்கல் வந்து போகிறது. போகாமல் என்ன செய்யும்? இயற்கை நியதி எதற்குத் தான் கட்டுப்படும்? மழை நிற்கவில்லை; பெய்கிறது. பயிர் வளர்கிறது; யுத்தத்தை எதிர்பார்க்கவில்லை, விளைகிறது. தலை கனத்துச் சாய்கிறது. மக்களை நோக்கி "வருக வருக என்னையெடுத்து உண்டு களிப்பீர்களாக" என்று கூறுவது போல் அசைந்தாடுகிறது. என்னே இயற்கை. சாவு ஒரு புறம். வாழ்வொரு புறம். அழிவு ஒரு புறம். ஆக்கம் ஒரு புறம். என்றாலும் பொங்கல் விழாவைக் கொண்டாடும் மக்கள் மனம் நிம்மதி யடைந்திருக்கவில்லை. அடுத்த பொங்கல் மகிழ்ச்சிக்குரியதாக இருக்கலாம். அப்படி நம்பலாமல்லவா? சண்டை இவ்வாண்டில் ஒழிந்து போகட்டும். அடுத்த பொங்கலாண்டில் மக்கள் சுகமுறட்டும்.

## மலாயா

மலாயாப் போர் நிலைமை ஒரு ஒழுங்காகத்தான் போய்க் கொண்டிருக்கிறது. நமக்குக் கிடைக்கிற செய்திகளைக் கொண்டு பார்க்கும்போது பிரிட்டிஷ் கட்சிப் படைகள் எதிரியை ஒருவாறு தடுத்துக்கொண்டும், பாலங்கள் ரயில் தண்டவாளங்கள் ரயில் வண்டிகள் ஏரோப்பிளேன் கூடங்கள் ஆகிய ராணுவ வசதிகளை நொறுக்கிக் கொண்டும், இன்னும் எதிரிகள் கையில் பிடிபடும் இடங்கள் உபயோகப்படாதபடி ஸ்தலங்களைச் செய்வதிலுமே மும்முரமாக வேலை நடத்தி வருவதாகத் தெரிகிறது. ரயில் மார்க்கத்தில் சிரம்பான் வரை கிட்டத்தட்ட ஜப்பானியர் வசமாகி விட்டதாகத் தெரிகிறது. கடல் மார்க்கத்தில் பார்த்தால் மூவார் வரையும் தீர்ந்து போய்விட்டதாகவே எண்ண வேண்டியிருக்கிறது.

கீழ்கரை மேல்கரை ஆகிய இரு புறமுள்ள ரயில் ரோடுகள் சந்திக்குமிடம் வரை ஜப்பானியர் ஆக்கிரமிக்க இன்னும் சில மைல்தூரந்தா னிருக்கிறது. அப்பால் மலாயா தீபகற்பம் முழுவதும் ஜப்பானியர் கைவச மென்பதில் யாதொரு சந்தேகமும் தோன்ற இடமில்லை. தவிர இனி நிற்பது சிங்கப்பூர் தான். இடையில் பெருந் தடைகளோ ரர்ணுவ ஸ்தலங்களோ இல்லை. பாலங்களை உடைத்தெறிவதால்தான் யுத்தம் சமாளிக்கப்பட்டு வருகிற தென்று தெரிகிறது. பெரும் பாலங்களைக் கட்டிக் கொண்டுவருவதில்தான் ஜப்பானியப்படை தாமதப்படுகிற தென்று வருகிற செய்திகளிலிருந்து தெரிகிறது. நேச தேசத்தாரின் திட்டப்படி 43ம் வருஷம் வரை ஜப்பானியர் கட்டாத பொலி பெருதாகத் திரிவார் களென்று தெரிகிறது. குருக்களைக் கடித்த நாய் நரகத்துக்குப் போகுமென்று நேசதேசத்தார் சொல்வது மக்களுடைய கஷ்டகாலந்தானே தவிர வேறில்லை. அந்த நாய் 43ம் வருஷம் நரகத்துக்குப் போகட்டும். அது வரை குருக்கள் கதி யென்னவென்பதை நோக்க யாரிருக்கிறார்கள்? சர்வ வல்லமையுள்ள பிரிட்டனும் பூலோகத்துக் கெல்லாம் பொருள் வழங்கும் பிரிட்டனும், கீழ்த் திசை யுத்தத்தை முக்கியமில்லையென்று கருதி விட்டமை மிக மிக வருந்தத்தக்கது. சிங்கப்பூரைப் பலமாகக் காக்கவேண்டியது அவசியமென்று நேச தேசங்கள் ஒரு முகமாக் கருதி யிருப்பது வரவேற்புக்குரியதாகும். சிங்கப்பூர் விழாவிட்டால் இந்தியாவைத் தாக்குவது சுலபமான காரியமாக இராது. பார்க்கலாம்.

## உள்ளூர்ச் செய்திகள்

### நகர சபைக் கூட்டம்

காரைக்குடி நகர சபையின் சாதாரணக் கூட்டமொன்று 10-1-42ல் கூடவிருந்தது. ஆனல் அன்று போதுமான அங்கத்தினர்கள் வராததால் கூட்டம் ஒத்திவைக்கப் பட்டது. வருகிற சனிக்கிழமை 17-1-42 மாலை 5 மணிக்கு ஒரு சாதாரணக் கூட்டம் நடைபெறும்.

### அஷ்டமிப் பிரதக்ஷிணம்

சென்ற சனிக்கிழமை யன்று காரைக்குடி நகரச் சிவன் கோயில் பஞ்சமூர்த்திகளும் வழக்கம்போல் விமரிசையாகத் திருவீதிகளில் பவனி வந்து இரவு சுமார் 12 மணிக்கு சேர்க்கை சேர்ந்தார்கள்.

### காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டம்

காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டம் ஜனவரி 13-ந் தேதி காலை வார்தாவில் கூடியது. ஜனவரி 26-ந்தேதி சுதந்திர தினத்தைக் கொண்டாடும்படியும், காங்கிரஸ் கமிட்டிகள் வழக்கம்போல் மீண்டும் வேலை செய்ய வேண்டுமென்றும், சத்யாக்கிரகிகளை மெம்பர்களாக இருப்பரென்றும், 1941-42 ம் வருஷத்துக்கான சந்தாவை ஜூன் 30-ந்தேதிக்குள் செலுத்துபவர் எல்லோரும் காங்கிரஸ் மெம்பர்களாகக் கொள்ளப்படுவரென்றும் தீர்மானிக்கப்பட்டது. அன்று பிற்பகல் கூட்டத்தில் மகாத்மா காந்தியும் கலந்துகொண்டார். பர்தோலி தீர்மானங்கள் ஊர்ஜிதம் செய்யப்படும் என்று ஊகிக்கப்படுகிறது.

தற்கால நிலைமையை உத்தேசித்து இவ்வருஷம் காங்கிரஸ் மகாசபையைக் கூட்ட வேண்டியதில்லை யென்று காரியக் கமிட்டி தீர்மானித்திருக்கிறது.

### ஜனுப் மெஹரலிக்குத் தண்டனை

பஞ்சாப் சர்க்கார் விடுத்த தடையுத்தரவை மீறியதாகக் கைது செய்யப்பட்ட அ. இ. காங்கிரஸ் அபேதவாதக் கட்சிப் போதுக் காரியதரிசி ஜனுப் யூஸப்மெஹரலிக்கு 6 மாதக் கடுங்காவலும் 500 ரூ. அபாரதமும் தவறினல் மேற்கொண்டு 3 மாதச் சிறைவாசமும் அளிக்கப்பட்டன.

## சென்னைக்கு இப்போது அபாயமில்லை

### காரைக்குடியில் கவர்னரின் ஆலோசகர்

சென்னை கவர்னரின் ஆலோசனையாளர் மிஸ்டர் ஜி. டி. ரூதர்போர்டு காரைக்குடிக்குச் சென்ற செவ்வாய்க் கிழமை விஜயம் செய்தார். பகல்12-50க்குக் காரைக்குடி ரெயில்வே ஸ்டேஷனில் ஜில்லா கலக்டர், டிபுடி கலெக்டர், டி. எஸ். பி., ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர், காரைக்குடி முனிஸிபல் கமிஷனர் முதலியவர்களும், நகரப் பிரமுகர்களும் அவரை வரவேற்று மாலை அணிவித்தனர். ராவ்பகதூர் எம். ஆர். எஸ். ரத்தின வேலுசாமி செட்டியார் அவர்களாலும், ஸ்ரீமான் ஆவி. பள. சித. சிதம்பரம் செட்டியார் அவர்களாலும் மாலை 4-மணிக்கு எஸ். எம். எஸ். ஹைஸ்கூலில் மிஸ்டர் ரூதர்போர்டுக்கு உயர்ந்த முறையில் ஒரு தேநீர் விருந்து நடத்தப் பெற்றது. விருந்தில் நகரப் பிரமுகர்களும், உயர்தர அதிகாரிகளும் கலந்து கொண்டனர். மாலை 5-30 மணிக்கு மிஸ்டர் ரூதர்போர்டு ஷை பள்ளிக்கூடத்தில் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் பேசினர். ஒலிபரப்பிகள் அமைக்கப்பட்டிருந்தன. பேசுவதற்கு முன் ராவ்பகதூர் எம். ஆர். எஸ். ரத்தின வேலுசாமி செட்டியார் யுத்தநிதிக்கு அளித்த ரூ2001 நன்கொடையை மிஸ்டர் ரூதர்போர்டு ஏற்றுக் கொண்டு அன்னருக்கு வந்தனம் தெரிவித்தார். யுத்தத்தின் தற்போதைய நிலைமைபற்றி மிஸ்டர் ரூதர்போர்டு பேசியதின் சாராமாவது:—

"ஜப்பான் யுத்தத்தில் இறங்கிய பிறகு நாட்டில் பீதியும் திகிலும் அதிகரித்து வருகின்றன. பொய்யான வதந்திகள் பரப்புவது தான் ஷை பீதிக்கு முக்கிய காரணம். யுத்தம் இந்தியாவை நெருங்கியிருக்கிறது. புத்தத்தைப்பற்றி இந்தியா சிரத்தை எடுத்துக் கொள்ள அது தூண்டியிருக்கிறது. ஜப்பான் அக்கிரமமான முறையில் யுத்தத்தைத் துவக்கியதென்பதுதெளிவாகி யிருக்கிறது. யுத்த தர்மத்தை அது சற்றும் கவனிக்கவில்லை. தனது தோழனை ஜர்மனியிடம் நல்ல பெயர் எடுப்பதற்காகவே இந்த யுத்தத்தைத் துவக்கியிருக்கிறது. அது யாதொரு தகவலும் அன்னியில் பிலிபைன்ஸ், வேக் ஆகிய அமெரிக்கத் தீவுகளின் பேரில் யுத்தம் தொடுத்ததால் அமெரிக்கா யுத்தத்தில் உடனே இறங்கி நமக்குக் கூட்டாளியாக அமையும்படி நேர்ந்தது. அமெரிக்கத் தீவுகளை ஜப்பான் தாக்காமல் மலேயா, சையாம், சிங்கப்பூர் ஆகிய இடங்களை மட்டும் தாக்கியிருக்குமானல் அமெரிக்கா யுத்தத்தில் இறங்காமல் போயிருக்கும். அமெரிக்கா வளம் மிகுந்த நாடு; யுத்த தளவாட உற்பத்தியில் தலைசிறந்து விளங்குகிறது. இத்தகைய பெரிய நாட்டின் நட்பு நமக்குக் கிடைத்தது நல்ல காலமாகும்.

"மலேயாவில் ஜப்பானியருக்கு ஆரம்பத்தில் சிறிது வெற்றி கிடைத்திருக்கிறது. ஜப்பான் திடீரென்று தாக்கியது; அமெரிக்கா அப்போது தயாராக இல்லை. நமது சேனைகளும், எஞ்சிய தளவாடங்களும் முக்கிய விரோதியான ஜர்மனியைத் தாக்குவதற்கு உதவிய ரஷ்யாவுக்கு அனுப்பப் பட்டிருக்கின்றன. ஆகவே மலேயாவுக்கு உதவிப் படைகள் உடனே யனுப்பசாத்தியமில்லாமல் போயிற்று. என்றாலும் நமது துருப்புகள் மிக சாமர்த்தியமாகப் போர் செய்து வருகின்றன. சிங்கப்பூர் நன்ருகப் பாதுகாக்கப் பட்டு வருகிறது. அதை ஜப்பான் கைப்பற்றுவது என்பது முடியாத காரியம். சிங்கப்பூர் பாதுகாக்கப்படும் வரை இந்தியாவில் யுத்த பீதிக்குக் காரணமேயில்லை. வெகு சமீபத்திலுள்ள ரங்கூன் தாக்கப்பட்டதால் சென்னை முதலிய இடங்கள் அபாய நிலையில் இருப்பதாகத் தப்பாக எண்ணப்படுகிறது. இந்த பீதிக்குச் சிறிதும் காரணமில்லை. ஏனெனில் ஜப்பான் விமானங்கள் சென்னைக்கோ, மற்ற இடங்களுக்கோ வர இயலாது. யுத்த விமானமோ, குண்டெறியும் விமானமோ எவ்வளவு உயர்ந்ததாக இருந்தாலும் அதனல் 1600மைலுக்கு மேல் பறக்க முடியாது. ஒரு இடத்திலிருந்து 800 மைல் பறந்து சென்று, பின்னர் 800 மைல் திரும்ப வேண்டும். சென்னை சிங்கப்பூரிலிருந்து சுமார் 1500 மைல்; சென்னைக்கு வெகு சமீபம் உள்ளது என்று சொல்லக் கூடிய விக்டோரியா முனை 1100மைல் தூரத்தில் இருக்கிறது. ஆகவே சிங்கப்பூரிலிருந்தோ விக்டோரியா முனையிலிருந்தோ ஜப்பான் விமானங்கள் பறந்து வந்து குண்டு எறிந்து விட்டுத் திரும்பிச் செல்வது என்பது சாத்தியமாகக்கூடிய காரியமல்லவாதலால், இத்தகைய நடவடிக்கையை ஜப்பானியர் மேற்கொள்ள மாட்டார்கள். ஆகவே சென்னைக்கு தற்சமயம் விமானப்படை எடுப்பு அபாயம் இல்லை. பின்னை ஏன் இருட்டடிப்பு ஏற்பாடுகளும் ஏ. ஆர். பி. முறைகளும் கையாளப் படுகின்றன என்று கேட்கலாம். இவைகள் எல்லாம் எச்சரிக்கைக்கான நடவடிக்கைகளே யாகும்.

"பீதிக்குத் தற்போது அவசியம் இல்லை என்பது வெளிப்படையாக இருந்தும் சிலர் கீழ்த்தரமான வதந்திகளைக் கிளப்புவதும் கேவலமான செய்கைகளைக்கையாளுவதும் தவருகும்."

மிஸ்டர் ரூதர்போர்டு ஆங்கிலத்தில் பேசியதை தேவகோட்டை—காரைக்குடி யுத்தக் கமிட்டி காரியதரிசி திரு. எம். ஆர். கிருஷ்ணசாமி ஐயங்கார் தமிழில் மொழி பெயர்த்துச் சொன்னர். நன்றி கூறலுடன் கூட்டம் முடிந்தது. கூட்டத்திற்கு நகர வாசிகள் ஏராளமாக வந்திருந்தனர்.

நேற்று புதன்கிழமை காலை மிஸ்டர் ரூதர்போர்டு தேவகோட்டையில் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் பேசினர். (நமது நிருபர்)

## பட்டப்பகலில் கொள்ளையிட முயற்சி

### வண்டிக்காரன் சுடப்பட்டான்

9-1-42 பகல் 11 மணிக்கு ஒற்றை மாட்டு வண்டி ஒன்றில் 4 ஆச்சிமார்கள் கல்லுப்பட்டியிலிருந்து காரைக்குடி வந்து கொண்டிருந்தனர். நடுவே உள்ள காட்டுக்குப் பக்கத்தில் 3 திருடர்கள் அரிவாள், கம்பு, துப்பாக்கி ஆகியவற்றுடன் வண்டியை மறித்து ஆச்சிமார்கள் அணிந்திருந்த நகைகளைக் களவாட எத்தனிக்கையில், வண்டிக்காரன் ஷை திருடர்களைத் தடுக்கவே அவனை ஷையார்கள் முழங்காலில் துப்பாக்கியால் சுட்டு விட்டு சமீபத்தில் ஒரு பஸ் வந்ததால் ஓடிவிட்டனராம். நகைகள் எதுவும் அவர்கள் வசம் அகப்படவில்லை. சுடப்பட்ட வண்டிக்காரன் காசிக் கோனர் காரைக்குடி ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருகிறான். வண்டியிலிருந்த ஆச்சிமார்களுக்குச் சிதறிய துப்பாக்கியின் ரவையால் சிறிது காயமேற்பட்டது. காரைக்குடி போலீசார் இது சம்பந்தமாகத் தீவிரமாகப் புலன் விசாரித்து வருகின்றனர். (க—நி)

## காரைக்குடியில் வெளிச்சக் கட்டுப்பாடு

ஜனவரி 11-ந்தேதி முதல் காரைக்குடியில் வெளிச்சக் கட்டுப்பாட்டுத் திட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. அன்று மாலை போலீஸார் கல்லுக்கட்டியிலுள்ள கடைகளுக்குச் சென்று விளக்குகளின் வெளிச்சம் வெளியே தெரியாதபடி மறைக்க ஏற்பாடு செய்தனர். வீதிகளிலுள்ள லைட்டுகளில் பெரும்பாலானவை அணைக்கப்பட்டு விட்டன. முக்கியமான இடங்களிலும் கல்லுக்கட்டியிலுமுள்ள விளக்குகளுக்குமட்டும் கருப்பு மூடி போடப்பட்டிருக்கிறது. இதர லைட்டுகளுக்கும் மூடி போடப்பட்டதும் எல்லா விளக்குகளும் எரியவிடப்படுமென்று தெரிகிறது. நகர் முழுதும் இரவில் ஒரே இருட்டாக இருக்கிறது.

தேவகோட்டை மானமதுரை முதலிய இடங்களிலும் இதேமாதிரி வெளிச்சக் கட்டுப்பாட்டுத் திட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது.

## சென்னைக்கு ஆபத்தில்லை

### கவர்னர் ரேடியோப் பிரசங்கம்

சென்னை கவர்னர் ஜனவரி 13-ந்தேதி மாலை ரேடியோவில் நிகழ்த்திய பிரசங்கத்தில், தற்பொழுது இந்தியா மீது ஜப்பான் படையெடுக்கும் அபாயம் கிடையாதென்றும், சிங்கப்பூர் பிரிட்டன் வசம் இருக்கும் வரை அந்தப் பிரச்னையே தோன்ற இடமில்லை யென்றும், நாட்டில் யுத்த முயற்சி தடைப்படாமல் இருக்கும் பொருட்டு தேசாபிமானமுள்ள ஒவ்வொருவரும் தன் வேலையை அமைதியுடன் செய்து வர வேண்டியது கடமையாகுமென்றும் குறிப்பிட்டார்.



## ரஷ்ய யுத்தம்

### 572 ஊர்கள் பிடிபட்டன

இவ்வருஷ ஆரம்பத்திலிருந்து 5-ந் தேதி வரை மாஸ்கோ பகுதியில் 572 ஊர்களை ரஷ்யர் பிடித்திருக்கின்றனர். சுமார் 10,000 சவங்களை ஜர்மானியர் விட்டுச் சென்றவிட்டனராம்.

மத்திய முனையில் முக்கியமான பட்டணமான மொஜாக்ஸை ரஷ்யர் திரும்பப் பிடித்து விட்டதாகத் தெரிகிறது.

கிரிமியாவில் ஸெபாஸ்டபூலுக்குத் தெற்கே 10 மைலில் உள்ள பாலக்ளாவா என்ற ஊரை ரஷ்யர் பிடித்து விட்டனர்.

மத்திய முனையில் முன்னேறும் ரஷ்யத் துருப்புகள் வேகமாகப் புதிய படைகளைக் கொணர்கின்றனர். டானெட்ஸ் நதியைக் கடந்து பலத்த ரஷ்யப்படைகள் கார்காவை நெருங்கி விட்டதாகவும் கார்காவ் ஆபத்துக் குள்ளாகி யிருப்பதாகவும் லண்டனுக்குச் செய்தி கிடைத்திருக்கிறது.

### ரஷ்யாவில் நாஸிகள் அட்டூழியம்

மிஸ்டர் மாலடவ் மாஸ்கோவிலுள்ள அந்நிய தேசப் பிரதிநிதிகளுக்கு அனுப்பியுள்ள ஒரு அறிக்கையில், ஜர்மன் வசமான ஸ்தலங்களைத் தாங்கள் திரும்பவும் பிடித்த போது அவ்விடங்களில் ஜர்மானியர் பெருவாரியாகச் செய்த அட்டூழியங்களைக் கண்டதாகவும், ஆண் பெண் என்ற வித்தியாசம் இல்லாமல், ரஷ்யரனைவரும் தினசரி 20 மணி நேரம் கட்டாய ஊழியத்திற்கு ஆளாக்கப்பட்டதாகவும், பல சமயங்களில் அவர்களுக்கு உணவும், தண்ணீரும் கொடுக்க மறுக்கப்பட்டதாகவும், சாதாரண ஜனங்கள் சுரங்க வெடிகளை அகற்றும் வேலையில் பலவந்தப்படுத்தப்பட்டதாகவும், ரகசிய வேலைகளில் ஈடுபடுத்தப்பட்ட பல ரஷ்யர் அந்த வேலை முடிந்தவுடன் சுட்டுக் கொல்லப்பட்டதாகவும், இந்தக் கொடுமைகளுக்கு ரஷ்யர் பழிவாங்காமலிருக்கமாட்டார்கள் என்றும் தெரிவித்துள்ளார்.

### சீனப் போர்

சாங்ஷா நகரின் வெளிப்புறத்திருந்த ஜப்பானியத் துருப்புகள் துரத்தப்பட்டு விட்டன. எஞ்சியிருந்த 40,000 துருப்புகள் தப்பியோடும்போது 3000 துருப்புகள் லாடோ நதியில் மூழ்கி மாண்டன. தப்பியோடும் துருப்புகளுக்கு மைலோ நதியருகில் நேர்ந்த எதிர்ப்பில் 6000 பேர் இறந்தனர்.

### ஆஸ்திரேலியாவுக்கு பிரிட்டிஷ் அமெரிக்கப் படைகள்

ஆஸ்திரேலியாவின் பாதுகாப்புக்காக பிரிட்டனிலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் சீக்கிரம் படைகள் வரும் என்று ஆஸ்திரேலியக் கடற்படை மந்திரி ஒரு பிரசங்கத்தில் தெரிவித்தார்.

### பினங்கிலிருந்து அதிகாரிகள் வெளியேற்றம்

பினங்கிலிருந்து அதிகாரிகள் வெளியேற்றப்பட்ட விஷயம் தமக்கோ, குடியேற்றநாட்டுக் காரியதரிசிக்கோ தெரியாதென்று மலாய் கவர்னர் தெரிவிக்கிறார். மேற்கொண்டு வெளியேற்றம் நடந்தால் அதிகாரிகள் சிலர் பொது ஜனங்களுக்கு உதவி செய்வதற்காகத் தங்கள் இடங்களிலேயே இருக்கவேண்டுமென்றும், அவர்கள் ஜப்பானியர் வசம் சிக்குவதாயிருந்தால் கூட வெளியேறக் கூடாதென்றும் அவர் உத்தரவிட்டிருக்கிறார்.

### கனம் யூ ஸா ரங்கூன் திரும்புகிறார்

பஸிபிக் நெருக்கடி காரணமாக பர்மா வர இயலாமல் அமெரிக்கா சென்ற பர்மா பிரதம மந்திரி கனம் யூ ஸா யூடின்டட் ஆகியோர் இப்பொழுது அமெரிக்காவிலிருந்து திரும்பிக் கொண்டிருப்பதாகவும் சீக்கிரம் ரங்கூன் வரலாம் என்றும் ரங்கூன் கெஜட் அறிவிக்கிறது.

பீதியுண்டு பண்ணும் வதந்திகளைப் பரப்புவோரைக் கைது செய்யும்படி கல்கத்தாப் போலீஸ் கமிஷனர் உத்தரவிட்டிருக்கிறார்.

## கோலாலம்பூர் கைவிடப்பட்டது

ஜனவரி 6-ந்தேதி கோந்தானிலிருந்து பிரிட்டிஷ் படைகள் வாபஸானதாக சிங்கப்பூர்ச் செய்தி கூறிற்று. விமான கூடம் ஜப்பான் வசமாகிவிட்டது. இது சிங்கப்பூரிலிருந்து 200 மைல் தூரத்தில் உள்ளது.

வெலிம் நதிப் பிரதேசத்திலிருந்து பிரிட்டிஷ் துருப்புகள் பின்வாங்கிவிட்டதாக ஜனவரி 10உ வெளியான சிங்கப்பூர் அறிக்கை கூறுகிறது. பெரிய டாங்கிகளை ஜப்பானியர் உபயோகிக்கின்றனர் என்றும், விமான சப்ளை போதாமல் இருப்பதுதான் பிரிட்டிஷ் படைகளுக்கு ஏற்பட்டிருக்கும் பெருங்குறை என்றும் சொல்லப்படுகிறது. ஜப்பானியத் துருப்புகள் கள்ளத்தனமாக மலாக்கா ஜலசந்தியின் மேல்கரையோரமாக இறங்குவதாகவும், பிரிட்டிஷ் போக்குவரத்து சாதனங்களைக் குலைக்க முயல்வதாகவும், இவர்களைக் கண்காணிப்பதில் பிரிட்டிஷ் படைகளின் ஒரு பாகம் திருப்பப்பட வேண்டியிருப்பதால் சங்கடம் ஏற்படுவதாகவும் சிங்கப்பூர் அறிக்கை கூறுகிறது.

கோலாலம்பூரிலிருந்து வெளிவந்த "மலேயா மெயில்" என்ற பத்திரிகைக் காரியாலயம் 8-ந்தேதி நாசம் செய்யப் பட்டது. நகரிலுள்ள எல்லாக் கடைகளிலும் எதிரிக்கு உபயோகமாகும் சாமான்கள் அழிக்கப்பட்டு விட்டன. வெள்ளீயச் சுரங்கங்களில் தண்ணீர் நிரப்பப் பட்டது. தங்கியிருப்போருக்கு உணவுப் பொருள் தவிர மற்றவை அழிக்கப்பட்டன என்று தெரிகிறது. பல சாமான்கள் எதிரி வசமாகாதிருக்கும்பொருட்டு ஜனங்களுக்கு இனமாக வழங்கப்பட்டனவாம்.

சிங்கப்பூரில் சீனர் ஜப்பானியரை எதிர்க்கப் பெருவாரியான முஸ்தீப்பு செய்வதில் ஈடுபட்டிருப்பதாக சிங்கப்பூர்ச் செய்தி கூறுகிறது.

கோலாலம்பூரிலுள்ள பிரிட்டிஷ் துருப்புகள் 30 மைலுக்குத் தெற்கேயுள்ள தொரு இடத்துக்குப் பின்வாங்கிவிட்டன. இந்த இடம் சிரம்பானுக்கு வடக்கே யிருக்கிறது. விரோதிப் படைகள் நேசநேசப் படைகளை விடாமல் நெருக்கித் தொடர்ந்திருக்கின்றன.

மலேயாவிலுள்ள பெரிய பட்டணங்களுள் கோலாலம்பூர் இரண்டாவது பட்டணமாகும். ஆனல் ராணுவ முக்கியமான இடமல்ல வென்று சொல்லப்படுகிறது. ஜனத் தொகை ஒரு லட்சம். துருப்புகளுக்கு எவ்வித சேதமின்றிப் பின்வாங்கியது பிரமிக்கத்தக்க காரியமென்று கருதப்படுகிறது. கோலாலம்பூர் கைவிடப்பட்டதால், மேற்குக் கரையிலுள்ள ஸ்வெட்டன்ஹாம் துறைமுகத்தையும் இழந்துவிட்டதாக ஏற்படுகிறது என்றும் 'ஆனலிஸ்டு' எழுதுகிறார்.

சிரம்பான்மீது குண்டு வீசப்பட்டிருக்கிறது. இதனல் ரஸ்தாப் போக்குவரத்துக்குச் சிறிது நஷ்டமேற்பட்டதாம். 11-உ மூவாரை ஜப்பானிய விமானங்கள் தாக்கி, வர்திரப் பீரங்கிப் பிரயோகம் செய்ததாயும், ஒரு சிறு கப்பல் மூழ்கியதாகவும் தெரிகிறது. 12-உ காலை சிங்கப்பூர் இரு முறை தாக்கப்பட்டது. செவ்வாய்க் கிழமை யன்று சுமார் 50 விமானங்கள் படையெடுத்து வந்தனவாம்.

மலேயாவில் ஜப்பானியருடன் உதவியாக ஜர்மானியர் நின்று போரிடுவதாக இந்திய சிப்பாய்கள் கூறுகின்றனராம்.

### மலாயாவில் நிவாரண ஏற்பாடு

கஷ்டநஷ்ட மடைந்தவர்களின் நிவாரணத்துக்காக ராஜாங்க சபை மெம்பரான கனம் பி. சாமியின் மேற்பார்வையில் சிங்கப்பூரிலுள்ள குடியேற்றக் காரியதரிசி ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்தியிருக்கிறாராம்.

### மலாயாவிலிருந்து வெளியேற்றம்

சமீபத்தில் இந்தியப் பெண்களும் குழந்தைகளும் மலாயாவை விட்டு இந்தியாவுக்குப் புறப்பட்டதாக சிங்கப்பூர் ரேடியோ தெரிவித்தது. ராணுவ அதிகாரிகள், வக்கீல்கள், டாக்டர்கள், வர்த்தகர்கள் இவர்களைச் சேர்ந்த குடும்பஸ்தர்களும் சில சீனப்பெண்களும் இந்தியாவுக்குப் புறப்பட்டனர்.

## ரங்கூன் மீது குண்டுவீச்சு

சென்ற வாரம் பூராவும் ஓயாமல் ரங்கூன், மோல்மீன், மருத்மான் என்ற இடங்களில் விமானப் படை எடுப்பு எச்சரிக்கை செய்யப்பட்டது. எங்கும் சேதம் மிகவும் சொற்பமே ஏற்பட்டது.

மேற் கொண்டு பல சீனப் படைகள் பர்மாவுக்கு வந்திருப்பதாயும், அவை, பர்மா—தாய்லந்து—இந்தோ சீனு எல்லையை ஒட்டி வைக்கப்பட்டிருப்பதாயும் தெரிகிறது.

பர்மா எல்லைக் கருகிலுள்ள ஜப்பானியர் வசமான விமான கூடங்களை பிரிட்டிஷ் விமானங்கள் தாக்கின. 18 ஜப்பானிய யுத்த விமானங்கள் அழிக்கப் பட்டன. 26 விமானங்களுக்கு நாசம். ரங்கூனை நோக்கி ஜப்பானிய குண்டெறியும் விமானங்களுக்குத் துணையாக வரும் யுத்த விமானங்களைத் துரத்துவதின் பொருட்டு ஷை நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டதாகத் தெரிகிறது.

12-உ விடியற்காலை ரங்கூன் வடக்குப் பகுதியில் சில குண்டுகள் வீசப்பட்டனவாம். ஆனல் சேதமில்லை. 13-உ காலை 5 மணிக்கும் 14உ காலையிலும் நகரின் வட பாகத்தில் குண்டுகள் வீசப்பட்டன.

ஆயிரக்கணக்கான சீனத் துருப்புகள் பர்மா ரோடு வழியாகப் பர்மாவுக்கு யுத்த தளவாடங்களுடன் வந்துகொண்டிருக்கின்றனவாம்.

### டச்சுத் தீவுகள் மீது படையெடுப்பு

டச்சுத் தீவுகள் மீது ஜப்பானியர் படையெடுத்துவிட்டனர். வடகிழக்குப் போர்னியோவுக்கு அருகிலுள்ள தாராகான் என்ற எண்ணெய்க் கிணறுகள் நிறைந்த தீவில் 10-ந் தேதி இரவு ஜப்பானியர் துருப்புக் கப்பல்கள் மூலம் இறங்கியதாகவும், டச்சுக் குண்டெறியும் விமானங்கள் அவைகளைத் தாக்கியதில் நல்ல பலன் ஏற்பட்டிருக்கும் என நம்புவதாகவும் 11-ந் தேதி வெளியான பட்டேவியா செய்தி கூறுகிறது. அதே சமயத்தில் வடஸெலிபஸ் தீவிலுள்ள மின்னு ஹாஸா என்ற பிரதேசத்தில் 3 இடங்களில் ஜப்பானியப் பாரசூட் படையினர் இறங்கியதாகவும் அங்கு கடுமையான யுத்தம் நடந்து கொண்டிருப்பதாகவும் ஷை பட்டேவியா செய்தியில் கண்டிருக்கிறது.

மணிலாப் பிரதேசத்தில் ஜப்பானியர் ராணுவச் சட்ட அமுலை ஏற்படுத்தியிருக்கின்றனர்.

### மலேயாவுக்கு ஏற்றுமதி செய்ய லைசென்சு வேண்டும்

மலேயா சமஸ்தானங்களுக்கும் தொடுவாய் நாடுகளுக்கும் எந்தவிதச் சாக்குகளை ஏற்றுமதி செய்வதாக இருந்தாலும் லைலென்ஸ் வேண்டுமென்று லண்டனிலுள்ள வியாபார போர்டு உத்தரவிட்டிருக்கிறது. பிரிட்டிஷ் போர்னியோ, கில்பர்ட் தீவு, எல்லிஸ்தீவு, ஹாங்காங், மலேயா சமஸ்தானங்கள், சாவாக் நாடு, தொடுவாய் நாடுகள் இவற்றிற்கு ஏற்றுமதி செய்ய அளித்திருந்த பழைய லைலென்சுகள் ரத்து செய்யப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

### மலேயா புதிய சேனதிபதி முழக்கம்

சென்ற சனிக்கிழமையன்று ரேடியோவில் மலேயா புதிய சேனதிபதி ஜெனரல் ஹென்ரிபௌனல் பேசுகையில் இது வரைக் கண்டிராதபடி சிங்கப்பூர் கடுமையாகத் தாக்கப்படக்கூடும் என்றும், அமெரிக்க, ஆஸ்திரேலிய, பிரிட்டிஷ், டச்சுத் தீவுகளின் படைகள் ஒரே தலைவரின் கீழ் வேலை செய்வதால் சிங்கப்பூரைக் காக்க முடியும்என்றுதான்நம்புவதாகவும்கூறினர்.

### மலேயா நெருக்கடிக்குக் காரணம் என்ன?

மலேயாவின் தற்காலக் கேவல நிலைமைக்குக் காரணம் மிகுந்த அசிரத்தையும் அசட்டையுந்தான் என்று சாவாக் ராஜா சொல்கிறார் என்றும், சிங்கப்பூரின் திறமையற்ற ராணுவ அதிகாரிகளால் அங்கு நிலைமை கேவலமாகி விட்டதென்றும், அவர்கள் உடனே நீக்கப்பட வேண்டுமென்றும் ஆஸ்திரேலியப் பிரதம மந்திரி மிஸ்டர் கர்டின் சொல்லி யிருக்கிறார். சிங்கப்பூர் ராணுவத் தலைமை அதிகாரிக்கும் கவர்னருக்கும் அபிப்பிராய பேதமிருப்பதாயும், விமானப் படையும் கடற் படையும் ஒத்துழைக்கவில்லை யென்றும் சாவாக் ராஜா சொன்னராம்.

## மார்க்கெட் செய்தி

### சிங்கப்பூர் ரப்பர்

சிங்கப்பூர், ஜன. 10உ

புகை போட்டது ஸ்டாண்டர்டு ஒரு பீக்கல் ஐம்பத்தொரு வெள்ளி.

### கொழும்பு மார்க்கெட்

கொழும்பு, ஜன. 14உ

| | | |
|---|---|---|
| கிரேப் ரப்பர் | 57 | சதம் |
| ஷீட் ,, | 56 | ,, |

தேங்கா யெண்ணெய் டன் 1க்கு ரூ. 500

### சென்னை மார்க்கெட்

சென்னை, ஜன. 14உ

| | | | |
|---|---|---|---|
| சவரன் (மொத்த விலை) | 32 | 0 | 0 |
| சவரன் (சில்லறையில்) | 32 | 0 | 6 |
| மூசை தோலா 1க்கு | 46 | 1 | 0 |
| வெள்ளி ரெடி 100 தோலா | 70 | 10 | 0 |
| வெள்ளி ரூபாய் எடை | 0 | 11 | 3 |

### லாகூரில் வியாபாரிகள் ஹர்த்தால்

விற்பனை வரியை எதிர்த்து லாகூரில் சென்ற சில தினங்களாக வியாபாரிகள் கடையடைத்து ஹர்த்தால் அனுஷ்டித்து வருகின்றனர்.

### 3 மாணவர் கைது

மதுரையில் 13-உ செச்சனுதன், கோவிந்தராஜலு, ராமச்சந்திரன் ஆகிய மூன்று மாணவர்களும், கறுப்பையா, சகைமுத்து முதலிய ஐந்து காங்கிரஸ் அபேதவாதிகளும் பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்யப்பட்டு வேலூர் – ராஜமகேந்திரம் சிறைகளுக்கு அழைத்துச்செல்லப்பட்டனர்.

### ஜில்லாக் கலெக்டர் பரிசோதனை

ராமநாதபுரம் ஜில்லாக் கலக்டர் ராவ் பகதூர் வி. திருவேங்கட முதலியாரவர்கள் சென்ற சில தினங்களாகத் தனுஷ்கோடி, மண்டபம் முதலிய இடங்களைப் பார்வையிட்டு அங்கு வெளிச்சக் கட்டுப் பாட்டுத்திட்டம் சரிவர நடைபெறுகிறதா என்பதைப் பரிசோதனை செய்தார். மண்டபத்திலும் பாம்பனிலும் ஏ. ஆர். பி. உபகமிட்டிகள் அமைக்கப்பட் டிருக்கின்றன.

### அண்ணமலைப் பல்கலைக்கழகத்து நகரத்தார் மாணவர் கழகம்

நிகழும் தைத் திங்கள் 5-ம் நாள் (18-1-42) ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் 5-மணி அளவில் நகரத்தார் மாணவர் கழகத்தின் முதலாவது ஆண்டு நிறைவு விழா கழகக் கட்டிடத்தில் நடைபெறும். அவ்வமயம் கழகத் தலைவர் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் தலைமையில், கோட்டையூர் திரு. ஏ. கே. செட்டியார் அவர்கள் சொற்பொழிவாற்றுவார்.

### பாங்கிகள் ஏற்பாடு

அவசரகால ஏற்பாடாக ரிசர்வ் பாங்கியும், சென்னை கல்கத்தாவிலுள்ள அதன் கிளைகளும் இப்பொழுது அரை சத விகிதம் தள்ளி பர்மா நோட்டுகளை வாங்குகின்றனவாம். சிட்டகாங், விசாகபட்டினம், நாகபட்டினம் இவ்விடங்களிலுள்ள இம்பீரியல் பாங்கியின் கிளைகளும் இதே மாதிரி செய்துவருகின்றனவாம்.

### கரூரில் தீ விபத்து

#### ரூ 60,000 நஷ்டம்

கரூரில் ஜனவரி 10-ந்தேதி இரவு ஒரு பெரிய மோட்டார் ஷெட்டில் தீ விபத்து ஏற்பட்டது காரணமாக சென்னை ஸிம்ஸன் அன் கம்பெனிக்குச் சொந்தமான 3 பஸ்களும், உள்ளூர் டி. எஸ். எம். சர்வீசுக்குச் சொந்தமான 2 பினஷர் கார்களும் மற்றும் பல மோட்டார் சாமான்களும் நாசமாயினவாம். மொத்தம் சுமார் 60,000 ரூபாய் நஷ்டம் ஏற்பட்டிருக்குமென்று மதிப்பிடப்படுகிறது.

## விமானத் தாக்குதலுக்கு ஆளானவர்கள்

### ரங்கூனிலிருந்து கல்கத்தா வந்தனர்

ரங்கூனில் காயமடைந்த சுமார் 135 பேர் ஜனவரி 10-ந் தேதி கல்கத்தாவுக்கு கொண்டு வரப்பட்டனர். அவர்களில் ஒருவர் கப்பலிலேயே இறந்து விட்டார். இன்னும் நால்வருக்கு நிலைமை மோசமாக இருக்கிறது. 38 பேருக்கு சொற்ப காயம்; நடக்கக் கூடிய நிலையில் இருக்கிறார்கள். ஷை காயமடைந்த 155 பேர்களில் 88 பேர் சென்னை வாசிகள். இவர்கள் பங்கூரா, மிதனபுரி, ஜல்பைகுரி, பெர்ஹாம்பூர், கிருஷ்ணகர் ஆகிய இடங்களில் உள்ள ஆஸ்பத்திரிகளில் சிகிச்சை பெற்று வருகின்றனர். இவர்களை இப்போதே அவரவர்கள் ஊர்களுக்கு அனுப்புவது உசிதமல்ல என்று சர்க்கார் நினைக்கின்றனர்.

பர்மா செஞ்சிலுவை சங்கத்தார் இவர்கள் ஒவ்வொருவருக்கும் 10 ரூபாய் வீதம் கொடுத்துதவி யிருக்கின்றனர். ரங்கூனில் விமானப் படை யெடுப்பால் நஷ்டமடைந்தவர்களுக்கு உதவ இந்தியத் தற்காப்பு ஊழியக் கமிட்டியார் பர்மா கவர்னருக்கு 10 ஆயிரம் ரூபாய் அனுப்பி யிருக்கின்றனர்.

மூன்று நாட்களுக்கு முன் புறப்பட்ட இந்தக் கப்பலில் குழந்தைகளும், ஸ்திரீகளும் பிறருமாக சுமார் 225 பிரயாணிகள் இருந்தனர்.

ரங்கூனிலிருந்து வந்திருப்பவர்களுக்கு உதவுவதற்காகக் கல்கத்தாவில் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டிருக்கிறது. ஷையார்களுக்கு நிவாரணம் அளிப்பதில் ஒத்துழைப்பை ஏற்படுத்துவது சம்பந்தமாக வங்க கவர்னர் தலைமையில் 10-ந் தேதி நடந்த மகா நாட்டில் பல பொது ஸ்தாபனங்களின் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

## ரங்கூன் கார்ப்பொரேஷன்

நெருக்கடி மிகுந்திருந்தாலும் வழக்கம்போல் அலுவல்களைக் கவனித்து வருவதென்று ரங்கூன் கார்ப்பொரேஷன் தீர்மானித்திருக்கிறது. ரங்கூனிலும் பர்மாவிலும் இதர இடங்களிலும் விமானத் தாக்குதலுக்கு உள்ளானவர்களின் நிவர்த்திக்காக 2 லக்ஷம் ரூபாய் கொடுக்க கார்ப்பரேஷன் தீர்மானித்திருக்கிறது.

## சென்னையிலிருந்து வெளியேற்றம்

சென்னை நகரிலுள்ள சுமார் 7லட்சம் ஜனங்களில் 20 முதல் 30 சதமானம் பேர் வரை வெளியேறிவிட்டதாக மதிப்பிடப்படுகிறது. இவர்களில் பெரும்பான்மையோர் குழந்தைகளும் ஸ்திரீகளும் தான். விசாகபட்டினம் முதலிய கடற்கரை நகர்களிலிருந்தும் ஜனங்கள் வெளியேறி வருவதாகத் தெரிகிறது.

சென்னையிலிருந்து பொது மக்கள் வெளியேறும் அவசியம் நேர்ந்தால் அவர்களுக்கும் சமமான ஏற்பாடுகள் செய்யப்படுமாம்.

## பருத்தித் தொழிலின் முக்கியத்துவம்

பிரிட்டனில் பருத்தித் தொழிலும், முக்கியமான யுத்த தேவைத் தொழிலாக மதிக்கப்படுகிறது. தேசிய சேவைக்காகப் பதிவு செய்து கொள்ளும் பெண்கள் பஞ்சு ஆலைகளுக்கும் அனுப்பப்படுவர்.

## மகாத்மா வார்தா திரும்பினர்

மகாத்மா காந்தி ஜனவரி 10-ந் தேதி காலை ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தி, ஆச்சாரிய கிருபாளினி, மகாதேவ தேசாய் ஆகியோருடன் வார்தா வந்து சேர்ந்தார்.

## பர்மாவிலிருந்து இந்தியா திரும்புவோர்

பர்மாவிலிருந்து இந்தியா திரும்பும் ஆண்களுக்கு மூன்றாம் வகுப்பு டிக்கட் கொடுப்பதை நிறுத்தும்படி முன்னர் பிறப்பித்திருந்த உத்தரவை பர்மா சர்க்கார் இப்போது வாபஸ் பெற்றுக்கொண்டு விட்டனர். அடுத்தபடி ரங்கூனிலிருந்து இந்தியாவுக்குப் புறப்படும் 4 கப்பல்களில் 70 சத விகிதம், ஸ்திரீகளுக்கும் குழந்தைகளுக்குமே இடம் தரப்படும் என்றும் அறிவித்திருக்கின்றனர்.

## இந்தியப் பிரச்னைபற்றி கனம் அமெரி

### பாதுகாப்புக் கைதிகள் விடுவிக்கப்படுவரா?

மிதவாதிகள் கோரிக்கையை 'டைம்ஸ்' பத்திரிகை கூட ஆதரித்திருப்பதையும், இதை உத்தேசித்து மிஸ்டர் அமெரி தமது மனோபாவத்தை மாற்றுவாரா என்றும் காமன்ஸ் சபையில் கேட்கப்பட்ட கேள்விக்கு இந்தியா மந்திரி பதிலே அளிக்கவில்லை. இந்தியா சம்பந்தமாக அவர் வெளியிட்ட அறிக்கையில், பொது அபாய மேற்பட்டுள்ள இச்சமயத்தில் ஒன்றுபட்டு உழைக்க வேண்டுமென்ற வைஸ்ராயின் வேண்டுகோளுக்குத் திருப்திகரமான பதில் கிடைக்கவில்லையென்றும், பல்வேறு ராஜீயத் தலைவர்களும் சமீபத்தில் செய்துள்ள தீர்மானங்கள், வெளியிட்டுள்ள அறிக்கைகள் ஏகோபித்த அபிப்பிராயங் கொண்டிருக்க வில்லையென்றும், லீக் தீர்மானமும் காங்கிரஸ் தீர்மானமும் ஒன்றுக்கொன்று நேர்மாறானவையாக இருக்கின்றனவென்றும் கனம் அமெரி குறிப்பிட்டார்.

### பாதுகாப்புக் கைதிகள்

மிஸ்டர் ஸோரன்ஸன் கேட்ட கேள்விகளுக்கு கனம் அமெரி அளித்த பதிலில் அடியில் வருமாறு குறிப்பிட்டார்:—

இந்தியப் பாதுகாப்புச் சட்டப்படி தண்டிக்கப்பட்ட, அல்லது பந்தோபஸ்தில் வைக்கப்பட்ட ஆனால் சமீபத்தில் வெளியிட்ட விடுதலை உத்தரவால் பாதிக்கப்படாத கைதிகளின் தொகை 2000-க்கும் சற்று அதிகமாக இருக்கும். யுத்த நடவடிக்கைகளை எதிர்க்கவும், தற்போதுள்ள சமூகத்தின் அடிப்படையான ஆதாரத்தைக் கவிழ்ப்பதற்காகவும் பலாத்கார முறையைக் கையாண்டவர்களை விடுவிக்கவேண்டுமென்று உத்தேசிக்கப்படவில்லை.

## சென்னைக் கவர்னர் யுத்த நிதி

### சர்க்கார் சமாதானம்

சென்னை கவர்னர் யுத்த நிதியிலிருந்து லண்டனுக்கு அனுப்பப்படும் தொகையில் நூற்றில் ஒரு பங்கு கூட இந்தியாவின் தற்காப்புக்குச் செலவு செய்யப்படவில்லையென்று சென்னைத் தெலுங்கு தினசரி "ஆந்திரப் பத்திரிகா" எழுதியுள்ளதற்கு சர்க்கார் பதி லளித்துள்ள அறிக்கையில் அடியில் வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கிறது :—

கவர்னர் நிதிக்குப் பணம் கொடுப்பவர்கள் எந்தக் காரியத்துக்காகக் கொடுத்திருக்கிறார்களோ அதற்கே அது ஒதுக்கப்படுகிறது. விமானங்கள் வாங்க லண்டனுக்கனுப்பப்படும் பணம் இந்தியாவின் பாதுகாப்புக்காக இங்கேயே செலவிடுவதைப் போன்றதாகும்.

## கண்ணாடிக் கதவுகள்

சர்க்கார் கட்டிடங்களிலுள்ள கண்ணாடிக் கதவுகளையும், ஜன்னல்களையும் அப்புறப்படுத்தும்படியும், காகிதம் ஒட்டிப் பாதுகாக்கும்படியும் சென்னை சர்க்கார் காரியாலயத் தலைவர்களுக்குத் தெரிவித்திருக்கின்றனர். வீட்டுச் சொந்தக்காரர்களும் இவ்வாறு செய்யும்படி யோசனை கூறப்பட்டிருக்கிறது.

சகரன்பூரில் ஒரு வியாபாரி சர்க்கார் குறிப்பிட்ட விலைக்கு கோதுமையை விற்க மறுத்துவிட்டதால் ரூ. 250 அபராதம் விதிக்கப்பட்டார்.

## மீண்டும் "ஹரிஜன்" பத்திரிகை

### இம் மாதம் 18-ந்தேதி வெளிவரும்

எந்த யுத்தத்தையும் பூரண அஹிம்சை மூலம் எதிர்ப்பவர்களின் சார்பாகத் தான் பெயரளவில் யுத்த எதிர்ப்புப் பிரசாரம் செய்யபோவதாயும், அதனால் சர்க்காரின் யுத்த முயற்சிக்குப் பங்கம் ஏற்படாதென்றும் மகாத்மா ஒரு அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார். 'ஹரிஜன்' முதலிய மூன்று வாரப் பத்திரிகைகளைத் திரும்பவும் தொடர்ந்து நடத்தப் போவதாகவும் அவர் குறிப்பிட்டிருந்தார்.

'ஹரிஜன்' பத்திரிகையின் முதல் இதழ் ஜனவரி 18-ந்தேதி வெளிவரும் என்று தெரிகிறது.

## விலைக்கட்டுப்பாடு மகாநாடு

பிப்ரவரி 6, 7 தேதிகளில் வர்த்தக மெம்பர் கனம் ராமசாமி முதலியார் தலைமையில் விலைக் கட்டுப்பாடு மகாநாடு நடைபெறும். மாகாண சர்க்கார்களின் பிரதிநிதிகள் இதில் கலந்து கொள்வார்கள்.

## வைஸ்ராயின் யுத்த நிதி

இந்நிதிக்கு டிசம்பர் 15-ந்தேதி வரைச் சேர்ந்த தொகை மொத்தம் ரூபாய் 5,62,28,554—7—0.

## நெருக்கடியின்போது கைதிகளை விடுவிக்க ஏற்பாடு

எந்தப் பிரதேசத்திலாவது ஜனங்களை வெளியேற்றும்படி ஏற்பட்டால் அப்போது தற்காலிகமாகவோ, நிரந்தரமாகவோ நிபந்தனையுடனோ, நிபந்தனையில்லாமலோ கைதிகளை விடுதலை செய்வதற்கு அனுகுணமான முறையில் பாதுகாப்புச் சட்ட விதிகளை இந்திய சர்க்கார் திருத்தியிருக்கின்றனர்.

## அமெரிக்காவில் இந்திய சித்திரக்காட்சி

நியு யார்க்கில் இந்திய சித்திரக் காட்சியொன்றுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஸர் கிர்ஜா சங்கர் வாஜ்பேயர், ஸர். ஆர். கே. ஷண்முகம் முதலியோர் இதற்கு ஏற்பாடு செய்தனர்.

## விமானத் தபால்களின் தவக்கம்

தூரக் கிழக்குத் திசையின் தற்போதைய நிலைமை காரணமாக இந்தியாவிலிருந்து மலேயா, ஆஸ்திரேலியா ஆகிய இடங்களுக்குச் செல்லும் விமானத் தபால் சர்வீஸ் சரிவர இயங்கவில்லை என்றும், கூடிய விரைவில் தபால்கள் விமானம் மூலம் அனுப்பப்படும் என்றும், இல்லையானால் தரைமார்க்கமாகவாவது அனுப்பப்படும் என்றும் புதிய டில்லியிலிருந்து அறிவிக்கப்படுகிறது.

## வீடுகளுக்கு மணல் மூட்டைகள்

சென்னைக் கோட்டைப் பிரதேசத்தில் இருக்கும் வீட்டுக்காரர்கள், அல்லது குடியிருப்போர் ஒவ்வொருவரும் மணல் மூட்டைகளை வைத்துக்கொள்ள வேண்டுமென்பது குறித்து சென்னை சர்க்கார் ஒரு அறிக்கை விட்டிருக்கின்றனர். ஏழைகள் கடற்கரையிலிருந்து மணல் மூட்டைகள் பெறுவதில் ஏற்படும் கஷ்டத்தை உத்தேசித்து கூரை வீடு அல்லது ஓட்டு வீடு ஒன்றுக்கு 4 மூட்டைகள் வீதம் கொடுக்க சர்க்கார் முடிவு செய்திருக்கின்றனர். ஆங்காங்கு திறக்கப்படும் ஏ. ஆர். பி. டிப்போக்களிலிருந்து மூட்டைகள் விநியோகிக்கப்படும். ஏ. ஆர். பி. வார்டன்களிடமிருந்து சீட்டுப் பெற்று இனாமாகவோ, அல்லது விலைக்கோ மூட்டைகளைப் பெறலாம்.

## நோட்டீஸ்

### சிவகெங்கை டி. மு. கோர்ட்டு

1941ஷ O. S. நிர். 311

1941ஷ I. A. நிர். 741

அ. சு. பெரி. சுப்பய்யா அம்பலம் } வாதி

1. உ. பம்பயன் அம்பலம்
2. கு. பெ. சேவுகன் அம்பலம் } பிரதிவாதிகள்.

இந்த நிம்பரில் வாதியால் கும. அரு. அருணாசலம் செட்டியாரால். சிவகெங்கை சப்கோர்ட்டு 1929ஷ S. C. 269. நிம்பரில் டிபாசிட் செய்திருக்கும் தொகையை செம்பனூர் சர்வே கக்ஷியில் சேர்ந்தவர்களுடைய ஈவை வாபற்ற பிருது செய்யப்பட்டிருக்கிறது. ஷை சர்வே கக்ஷியில் சேருதவர்களுடைய ரெப்ரசெண்டேட்டிவ் ஆக பிரதிவாதிகளை இதில் கக்ஷிக்காரர்களாக சேர்க்கப்பட்டிருக்கிறது. தாவா மனுவுக்கும் 19-1-42ஷ வாய்தா யேற்பட்டிருக்கிறது. அன்று தேதியில் ஷை சர்வே கக்ஷியில் சேருதவர்கள் தங்களுக்குள்ள ஆக்ஷேபனைகளை தெரிவித்துக்கொள்ளலாம் என்பதை இதன் மூலம் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

சிவகெங்கை 12-1-42. } M. M. ராமலிங்கய்யர், வாதி வக்கீல்.

## மலேயாவிலும்—ரெங்கூனிலும் இந்தியர்கள் நிலைமை

எதிரியின் முதலாவது தாக்குதலுக்குப் பிறகு மலேயாவிலும் ரங்கூனிலும் சாதாரண ஜனங்கள் பதட்டப்படாமலும், பரபரப்படையாமலும் தீவிரமான முறையில் நடவடிக்கை எடுத்து வருவதாகவும், முக்கியமாக, தமிழ் மக்கள் மிக்க நேர்த்தியான முறையில் நடந்து கொள்வதாகவும், தொழிலாளிகள் சாதாரணமாக வேலைக்கு வந்து மன நிம்மதியுடன் வேலை செய்கின்றனர் என்றும், இந்திய சர்க்காருக்குத் தகவல்கள் கிடைத்திருக்கின்றன. குண்டு வீச்சின் போது ஒளிந்து கொள்வதற்கும், அபாயங்களுக்குத் தக்கபடி நடந்து கொள்வதற்கும் ஜனங்கள் அதிசீக்கிரம் தேர்ந்து கொண்டு விட்டார்கள் என்று அத் தகவல்கள் கூறுகின்றன.

## பர்மா மந்திரி சபை

பர்மா மந்திரி சபை தினந்தோறும் கூடுகிறது. நாட்டைப் பாதிக்கும் முக்கியமான பல பிரச்னைகள் பற்றி கவர்னரும் மந்திரிகளும் விவாதிக்கின்றனர். விவாதத்தில் ராணுவ, ஸிவில் அதிகாரிகளும் கலந்து கொள்கின்றனர். யுத்த நிலைமை அவ்வப்போது கவனிக்கப்பட்டு எதிர்கால நடவடிக்கை சம்பந்தமான திட்டங்கள் வகுக்கப்படுகின்றன என்று ரங்கூனிலிருந்து ஒரு செய்தி தெரிவிக்கிறது.

## இந்தியர் சக்தியைத் திரட்ட

### அமெரிக்கப் பத்திரிகை யோசனை

"இங்கிலாந்து இந்திய மக்களை நேசதேசங்களின் யுத்த முயற்சிக்கு ஒரு கோடி நிலப்படை வீரர்களைக் கொடுக்கும்படி தூண்டுவதற்காக அதற்கு வேண்டிய அனுகூலங்களை யெல்லாம் அளித்துவிட வேண்டும். இந்தியாவின் விசேஷ சக்திகளை நாம் புத்திசாலித்தனம் வாய்ந்த முறையில் எவ்வளவு பூரணமாக உபயோகப்படுத்த முடியுமோ அவ்வளவு பூரணமாக உபயோகப்படுத்த வேண்டுமானால், இந்திய மக்களை இன்னும் அடிமையாக வைத்திருப்பது நியாயம்சையிலோ, லட்சியத்திலோ சற்றும் சாத்தியமில்லை" என்று நியூயார்க் 'மிரர்' பத்திரிகை எழுதியிருக்கிறது.





## இந்தியாவில் பால் உற்பத்தியின் அவசியம்

### வருஷத்துக்கு வருஷம் அதிகரிக்க வேண்டும்

நம்முடைய முதல் ஆகாரம் பால். அதை உண்டே வாழ்க்கையை ஆரம்பிக்கிறோம். சிசுவுக்கு அதுதான் பூரணமான ஆகாரம். வளரும் பிள்ளைக்கும் அது அவசியம். பாலைச் சிருஷ்டித்துத்தருகிற இயற்கையன்னையினுடைய வேலைத் திறமையை நாம் எவ்வளவு மெச்சினாலும் மிகையாகாது! அவசியமான, முக்கியமான ஊட்டச் சத்துக்களெல்லாம் அதில் இருக்கின்றன. சிசுவுக்குத் தாயின் பாலே ஏற்றது; கொஞ்ச காலங் கழித்து, பசுவின் பால் கொடுக்கலாம். உலகத்திலே பாலின் அருமை தெரியாதவர்களே இல்லை, அதற்கு எங்கும் மதிப்பு இருக்கிறது.

இந்தியாவில் பெரும்பாலோர் மாமிசம் புசிப்பதில்லை. ஆனால் அதிலே நிறைய பிசித (Protein) சத்து இருக்கிறது. ஆகையால் இந்தியர்கள் பிசிதம் இருக்கிற வேறே ஏதாவது ஒரு பதார்த்தம் சாப்பிட வேண்டும். இந்தப் பதார்த்தம் எவ்விதத்திலும் மாமிச சத்துக்குக் குறைந்ததாகவும் இருக்கப்படாது. இந்தியாவில் அப்படி ஏதாவது பதார்த்தம் இருக்கிறதாவென்று பார்க்கிறபோது, பசுவின் பால் ஒன்றுதான் அகப்படுகிறது. அதிலுள்ள பிசிதம் முதல் தரம்; மாமிசத்திலுள்ளதைவிடச் சிறந்ததென்று ருசுவாகியிருக்கிறது.

இது ஒரு முக்கியமான உண்மை. ஆகையால் இந்தியாவிலே கசாப்புக் கடைகளை விடப் பாற் பண்ணைகளுக்கே ஆதரவளிக்க வேண்டும். மக்காலம் என்ற உணவு முறை நிபுணர் அமெரிக்கருடைய ஆகாரத்தைக் குறித்து எழுதுகையில், ஒரு இடத்தில் கீழ்க்கண்டவாறு சொல்லியிருக்கிறார்: "நாம் மாமிசம் புசிப்பதை அடியோடு விட்டுவிடலாம்; அதனால் ஒரு கெடுதலும் ஏற்படாது. ஆனால் நாம் பாலைக் குறைக்க முடியாது; பெரியவர்கள் விஷயத்தில் கூடத் தான்; மீறிக் குறைத்தால், அதின் பலன் சீக்கிரத்தில் தெரியும். ஜனங்களுக்கு முன்னைப் போல வேலை செய்ய முடியாது." அமெரிக்காவிலே தலைக்கு வருஷத்துக்கு 55.3 காலன் பால் உபயோகிக்கிறார்கள்; இந்தியாவிலோ 6.5 காலன். எவ்வளவு வித்தியாசம் பாருங்கள்! நித்தம் மூன்று அவுன்சு கூட இல்லை. அதற்குங் குறைவு. ஒரு பட்டணத்திலே ஒரு அநாதைப் பள்ளிக்கூடம் இருக்கிறது. அதிலுள்ள பிள்ளைகளெல்லாம் வளரும் பிள்ளைகள், வயதுப் பிள்ளைகள். அவர்களுடைய ஆகாரத்தைப்பற்றி விசாரித்ததில், அவர்களுக்குத் தினம் மூன்று மேசைக் கரண்டி அளவு பாலே கிடைப்பதாகத் தெரிய வந்தது. எவ்வளவு பரிதாபம்! வளரும் பிள்ளைகளுக்குத் தினம் மூன்று மேசைக் கரண்டிப் பால்! இது எந்த மூலைக்குப் போதும்? அமெரிக்கர்கள் இப்பொழுது உபயோகிக்கிற அளவு பாலிலே இரண்டொரு இராத்தல் குறைத்துக் கொண்டாலுங் கூடக் குடி முழுகிவிடப் போகிறதென்று அத்தேச நிபுணர்கள் கத்துகிறார்கள். இந்தியாவிலோ? இலட்சக் கணக்கான பேருக்கு அது ஒரு துளி கூட அகப்படுவதில்லை.

சர் ராபர்ட் மக்காரிசன் சொல்லுகிறார்: "ஆகாரத்திலே பாற் பண்டங்கள் போதுமானபடி இருக்குமானால், மாமிசம் சாப்பிட வேண்டிய அவசியமில்லை" "போதுமானபடி" என்றால், குறைந்தது அரைச் சேர் என்று அர்த்தம்; கூடுமானால் ஒரு சேர். ஆனால் இந்தியாவிலே எத்தனை வீட்டுப் பிள்ளைகள் இந்த மாதிரிப் பால் குடிக்கிறார்கள்? வெகு சொற்பம் என்றே சொல்ல வேண்டும். "ஆகார சம்பந்தமாகப் பார்த்தால், இந்தியாவுக்கு இப்போது அவசியம் வேண்டியது பால். சுத்தமான பால் உற்பத்தியை வருஷத்துக்கு வருஷம் அதிகப்படுத்த வேண்டும். பாலைப் போல் முக்கியமான உணவுப் பொருள் இல்லை. பொது ஜன ஆரோக்கியம் அதையே பொறுத்தது......அது எவ்வளவு முக்கியமானதென்று வாலிபருக்குத் தெரிந்திருக்க வேண்டும். அவர்கள் இந்த அறிவை எங்கும் பரப்ப வேண்டும்"

நாம் இவ்வளவு நேரமும் சொன்னதிலே அவ்வளவு புதிது ஒன்றும் இல்லை. பாலின் அருமை எல்லாருக்கும் தெரிந்தது. ஆனால் எல்லாரையும் பால் குடிக்கச் செய்ய வேண்டும் என்ற முயற்சி புதிது. பாலைச் சாஸ்திரீயமாக உற்பத்தி செய்வதும் விநியோகிப்பதும் புதிது. இந்த மாதிரி முயற்சிகள் சமீப காலமாகவே செய்யப்படுகின்றன.

பாலெல்லாம் பாலல்ல; அதிலும் பல தரங்களுண்டு. நன்றாகப் போஷிக்கப்பட்டு ஆரோக்கியமாகவுள்ள பசுக்களின் பாலிலே இருக்கிற கொழுப்பும் சத்துக்களும் மற்றப் பசுக்களின் பாலிலே இருக்க மாட்டா. பசு மாட்டை எப்படி வளர்க்க வேணடும். அதற்கு என்னென்ன ஆகாரம் கொடுக்க வேண்டும் என்று தெரிந்திருக்க வேண்டும். பாலைக் காய்ச்சுவதால், அதிலுள்ள சத்து கொஞ்சம் கெடுவது வாஸ்தவமே, ஆனால் இந்தியாவில் கட்டாயம் காய்ச்சியே குடிக்க வேண்டும். சத்துக் கெட்டாலும் பாதகமில்லை. கெட்ட சத்துக்கு, புதுப் பழங்கள், புதுக் காய்கறிகள், கீரைகள் முதலியவற்றை தாராளமாகச் சாப்பிட்டால் சரி.

பாலிலே சாதாரண மேசைச் சர்க்கரையைச் சேர்க்கக் கூடாது; அப்படிச் சேர்த்துச் சாப்பிட்டால், புளிப்பும் வாயுவும் உண்டாகக் கூடும். பால் குடிக்கும் போது ஆத்திரம் ஆகாது. மடக்கு மடக்கென்று குடிக்கக் கூடாது. கொஞ்சங் கொஞ்சமாகச் சப்பி மென்று குடிக்க வேண்டும். பால் வாயிலுள்ள எச்சிலுடன் சேர்ந்து குழைவது அவசியம்.

பெரியவர்கள் மற்ற ஆகாரங்களோடுகூடத் தினம் கொஞ்சம் பாலும் சாப்பிட வேண்டும்; முக்கியமாக, மரக்கறி சாப்பிடுகிறவர்களுக்குப் பால் அவசியம். சாதாரணமாக "சைவ உணவு" என்று சொல்வது சம்பூரணமான ஆகாரம் அல்ல; அதிலே சில சத்துக்கள் குறைவாக இருக்கின்றன. சைவ உணவு சாப்பிடுகிறவர்கள் மரக்கறிகளோடு கூடத் தாராளமாகப் பாலும் சேர்த்துக் கொள்ள வேண்டும். (நல்வழி)

## கோதுமை மாவு வைத்திருப்போருக்கு சர்க்கார் உத்தரவு

இரண்டு மணங்குக்கு மேற்பட்ட கோதுமை மாவு வைத்துக்கொண்டிருக்கும் ஒவ்வொருவரும் அதுபற்றிய விவரங்கள் அனைத்தையும் புது டில்லியிலுள்ள கோதுமை இலாகா கமிஷனருக்குத் தெரிவிக்க வேண்டுமென்று ஐ. மா. சர்க்கார் உத்தரவிட்டிருக்கின்றனர்.

திபேத்தின் தலைநகரான லாசா சமுத்திரமட்டத்திற்கு 11,800 அடி உயரத்தில் அமைந்திருக்கிறது.





பிரிட்டிஷ் விமானப் படையைச் சேர்ந்த பிளன்ஹீம் போர் விமானங்கள்.

# :: மதிப்புரை ::

### மகாராஷ்டிர ஜீவன் உதயம்

[ஆசிரியர்: ரமேச சந்திர தத்தர் ஐ. ஸி. எஸ். மொழி பெயர்த்தவர்: அ. கி. ஜெயராமன். வெளியிட்டோர்: நவயுகப் பிரசுராலயத்தார், பக்கம் 292. விலை ரூ 1-12-0. கிடைக்கு மிடம்: நவயுகப் பிரசுராலயம் லிமிடெட், ஜி. டி. சென்னை.]

ஸ்ரீ ரமேசசந்திர தத்தர் ஐ. ஸி. எஸ். வர்க்கத்தைச் சேர்ந்தவர் எனினும் சிறந்த சரித்திராசிரியராகவும், தேசபக்தராகவும் விளங்கினர். மகாவீரர் சிவாஜியின் சரித்திரத்தில் முக்கியமான பாகத்தை நன்கு விளக்கி, இந்திய மக்களுக்கு தேசபக்தியை ஊட்டும் விதத்தில் இந்த சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு உயர்ந்த நவீனத்தைச் சிருஷ்டித்திருக்கின்றார். மகாராஷ்டிர ஜீவன் எச்சமயத்தில் இந்நாட்டில் உதயமானது—நாட்டிற்கு அது எந்தெந்த முறையில் ஜீவகளையை ஊட்டியது என்பனவற்றை ஆசிரியர் மிகுந்த திறமையுடன் நமக்குப் படம்பிடித்துக் காட்டியிருக்கிறார். மொகலாய சக்ரவர்த்தி செய்த சூழ்ச்சிகளும் அவற்றைத் தகர்க்க சிவாஜி செய்த பதில் சூழ்ச்சிகளும் நம் மனதைக் கவர்ந்து சிவாஜியின் தைரியத்தையும், சமயோசித புத்தியையும் பாராட்டச் செய்கின்றன. இந்த சரித்திர உண்மைகளை விளக்க இந்த நவீனத்தில் ரகுநாதனும் சரயூபாலாவும் காதலர்களாகத் தோன்றிக் கடைசிவரையில் காட்சியளித்து, இறுதியில் மறைந்து விடுகிறார்கள். இந்தக் கதையில் இந்திய நாட்டின் பண்டைய வீரம் மட்டுமல்ல, கலைஞானம், பெண்களின் பதிபக்தி, நாகரிகம், ஆழ்ந்த வைராக்கியம் எல்லாம் நன்கு பிரகாசிக்கின்றன. ஒவ்வொரு ஆணும் பெண்ணும் படிக்க வேண்டிய புத்தகம்.

### சரித்திரக் கதைகள்

[ஆசிரியர்: எம். எஸ். சுப்பிரமணிய ஐயர். வெளியிட்டோர்: சக்தி காரியாலயத்தார், பக்கம்: 152. விலை ரூ. 1. கிடைக்குமிடம்: சக்தி காரியாலயம், ஜி. டி., சென்னை.]

நம் தேசத்தின் உண்மைச் சரித்திரங்களைக் காண்பது அபூர்வம். சமீபத்தில் தான் இம்முயற்சி அரும்பியிருக்கிறது. உண்மையான சரித்திரம் எழுதப்பட்டால் அது எவ்வளவு ரசமாகவும், உபயோககரமாயும், பரவசப்படுத்துவதாயும் இருக்குமென்பதற்கு இந்நூல் ஒரு தக்க சான்று. "சரித்திர வாயிலாகப் புலப்படும் சிறப்புகளை நோக்கினும், நமது மூதாதைகளைப் போல் பலவிதத்திலும் மொய்ம்புடன் வாழ்ந்த சாதியார் யாருமில்லையென்னலாம்......இப்போது நாமோ சுயவரசு அல்லது சுயராஜ்யம் வேண்டுமென விரும்பி அதனை எய்த முனைந்து நிற்கின்றோம். இச்சமயத்திலே நமது பழம் பெருமை, ஆற்றல், அறிவு, ஆண்மை முதலியவற்றைக் கைநெல்லிக் கனிபோல் காட்டக் கூடிய சரித்திர சம்பவங்கள் யாருக்கும் ஊக்கமளிக்கும்" என்று ஆசிரியர் தமது முன்னுரையில் குறிப்பிடுகின்றார். தற்சமயம் தேசம் உள்ள நிலையில், இந்நூல் இளைஞருக்கு ஓர் ஆர்வமும் உற்சாகமும் ஊட்டி வீர விலாசம் பரப்பும் என்பதில் ஐயமில்லை. பள்ளிக்கூடங்களிலே பாடப் புத்தகங்களாக வைக்கப்படும் சரித்திரப் புத்தகங்களுக்குப் பதில், இத்தகைய புத்தகங்களை வைத்தால் மாணவர்கள் மகிழ்ச்சியுடன் படிப்பதுமன்றி, தங்கள் வாழ்க்கையில் மிகுந்த பயனுமடைவர் என்பது உறுதி. பத்தொன்பது சுவை ததும்பும் கதைகள் இதில் அடங்கியுள்ளன.

### பராசக்தி அர்ச்சனை

[இயற்றியவர்: சுவாமி சுத்தானந்த பாரதியார். வெளியிட்டோர்: அன்பு நிலையத்தார், ராமச்சந்திரபுரம். பக்கம் 24. விலை: அணு மூன்று.]

இது ஒரு பாமலர்ச் சுவடி, பராசக்தி உபாசனைக்குரிய அர்ச்சனை மாலை. இராமச்சந்திரபுரம் தமிழன்பர் திரு. சித. பழ. சண்முகம் அவர்கள் தம் செல்வன் சத்தியமூர்த்தி, செல்வி சூடிக்கொடுத்தாள் ஆகிய இருவர் புதுமைத் திருநாளில்அச்சிட்டு உதவியுள்ளார். பராசக்தி அர்ச்சனையும், சிவசக்தி யுபாசனையும் இதில் அடங்கியுள்ளன.

---

### ஸ்ரீ விவேகாநந்தர் விழா

லெக்ஷ்மிபுரம் திரு. ந. சொ. அரு. அருணசலன் செட்டியார் அவர்களால் நிறுவப்பெற்ற சொக்கலிங்க வித்தியாசாலையில் மார்கழித் திங்கள் 26ம் நாள் மாலை 4 மணிக்கு "ஸ்ரீ விவேகாநந்தர் விழா" கொண்டாடப்பெற்றது. ஆசிரியர் திரு S. அருணசலம் பிள்ளை அவர்கள், விவேகாநந்தரைப்பற்றி ஓர் சொற்பெருக்காற்றி விழாவை ஆரம்பித்து வைத்தார். மாணவ, மாணவிகள் விவேகாநந்தர் வீர மொழியையும், இதர விஷயங்களையும் பற்றி சொற்பெருக்காற்றினர். இடையிடையே தேசிய கீதங்கள் பாடப்பெற்றன. ஆசிரியர்களான திரு M. இராமநாதய்யரவர்களும், திரு M. இராமானுஜம் பிள்ளையவர்களும் விவேகாநந்தரைப்பற்றிப் பிரசங்கம்செய்தார்கள்.







### பிரிட்டனில் ரப்பர் பஞ்சம்?

**மலேயாப் போரால் நேர்ந்த கஷ்டம்**

தூரக் கிழக்கிலிருந்து பிரிட்டனுக்கு வரும் ரப்பர் சப்ளைகள் பாதிக்கப் பட்டிருப்பதால் பிரிட்டனில் ரப்பர் பஞ்சம் ஏற்படுவதைத் தவிர்க்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. உலகில் உற்பத்தியாகும், ரப்பரில் 90 சத விகிதம் மலேயா. டச்சுத் தீவுகள், இந்தோ—சீனு ஆகிய இடங்களிலிருந்து கிடைக்கின்றன. மலேயாவில் 40 சத விகிதம்; டச்சுத் தீவுகளில் 40 சத விகிதம்; இந்தோ-சீனுவில் 10 சத விகிதம்.

மலேயாவில் ரப்பர் விளையும் பிரதேசங்களில் பாதி ஜப்பானியர் வசம் போய்விட்டது. ரப்பர் உற்பத்தி அதிகமாயுள்ள சுமாத்ரா ஜாவா தீவுகளுக்கும் ஆபத்து நேர்ந்திருக்கிறது. எனவே, இருக்கிற ரப்பரைச் சேமிக்கவும், சப்ளையை அதிகரிக்கவும் யோசனை செய்யப்படுகிறது. அமெரிக்காவிலும் யுனைடெட் ஸ்டேட்ஸிலும் இருக்கும் ரப்பர் ஒரு வருஷத் தேவைக்கு மட்டும் போதுமென்று கணக்கிடுகிறார்கள். விளையாட்டுச் சாமான்கள், விரிப்புகள், குழாய்கள் முதலியவற்றை ரப்பரில் செய்யக் கூடாதென்று ஏற்கனவே தடுக்கப்பட்டிருக்கிறது. இன்னும் பழைய ரப்பர் சாமான்களை—கழிவு தாளைப்போல—திரும்பச் சேகரித்து உபயோகிக்கவும் இடமிருக்கிறது. மலாயாப் போர் காரணமாக வெளிய உற்பத்தியில் 60 முதல் 70 சதமானம் வரை இனி பிரிட்டிஷாருக்கோ, ஜப்பானியருக்கோ கிடைக்காது. பாக்கியிருப்பது பிரிட்டிஷாருக்குக் கிடைக்கும். ரப்பரில் 50 சதமானம் பிரிட்டிஷாருக்கு இனிக் கிடைக்காது; மிகுந்த கஷ்டப்பட்டு ஜப்பானியர் அதைப் பெற வேண்டியிருக்கும்.

### பர்மாவாழ் இந்தியருக்குப் பாதுகாப்பு

**இந்திய சர்க்கார் அறிக்கை**

பர்மாவிலுள்ள இந்தியருக்குப் பாதுகாப்பளிப்பது சம்பந்தமாக இந்திய சர்க்காரும் பர்மிய சர்க்காரும் தீவிர நடவடிக்கை எடுத்து வருகின்றனர். அதுபற்றி இந்திய சர்க்கார் வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் கூறுவதாவது:—

பர்மாவிலுள்ள இந்தியரின் க்ஷேமத்தைப்பற்றி அறிய இந்தியாவின் பல பாகங்களிலுள்ளவர்களும் மிகவும் ஆவல் கொண்டிருக்கின்றனர் என்பது சர்க்கார் அறிந்ததே. ரங்கூன் பல தடவை எதிரியின் தாக்குதலுக்கு உட்பட்டிருக்கிறது; ஆகவே அங்கு ஏற்பட்டுள்ள சேதம் கொஞ்சநஞ்சமல்ல. பாதிக்கப்பட்டவர்களுக்கு நிவர்த்தியும், உதவியும் அளிப்பதற்காக வைஸ்ராய் தமது யுத்த நிதியிலிருந்து 5 லக்ஷம் ரூபாய் கொடுத்திருக்கிறார். பர்மாவிலிருந்து இந்தியா வந்து சேருபவர்களின் உதவிக்காக பணம் தேவைப்படுவதாக மாகாண சர்க்கார் விண்ணப்பித்துக் கொண்டால் கவனிக்கப்படும். பர்மாவில் அதிகப்படி வைத்ய வசதிக்கு அவசியமிருந்தால் அதையும் இந்திய சர்க்கார் ஏற்பர். ரங்கூனுக்கு வெளியே பல இடங்களில் பர்மிய சர்க்கார் பல உதவி முகாம்களை ஏற்படுத்தியிருக்கின்றனர். சர்க்கார் ஊழியர்களுக்காக வீடு, வண்டி, பாதுகாப்பு வசதிகள் ஆகியவற்றையும் உதவ அவர்கள் முற்பட்டிருக்கின்றனர்.

இந்திய சர்க்காரின் ஏஜண்ட் அங்குள்ள இந்தியர்கள், பர்மிய சர்க்கார் ஆகியவர்களுடைய உதவியுடன் பாதுகாப்பு வேலையைத் துரிதமாகக் கவனித்து வருகிறார்; அவருக்கும் பர்மிய சர்க்காருக்கும்யோசனை கூற இந்தியக் கமிட்டி ஒன்றும் இருக்கிறது. ஸ்திரீகள் குழந்தைகள், யுத்த ஒத்துழைப்புக்கு அத்தியாவசியமாக இல்லாத புருஷர்கள் ஆகியோரைக் கடல் மார்க்கமாக வெளியேற்றுவதில் உதவ பர்மிய சர்க்கார் சம்மதித்திருக்கின்றனர். பர்மாவிலிருந்து தப்பிப் பிழைப்பவர்களுக்குக் கப்பல் வசதிகள் செய்துகொடுக்கும் விஷயத்தில் இந்திய சர்க்கார் தீவிர கவனம் செலுத்திவருகின்றனர்.

### அரிசி மூட்டைகளில் பிளேக் கிருமிகள்

**ஜப்பானியர் கொடுமை**

ஹுனான் பிரதேசத்தில் ஜப்பானியர் அரிசி மூட்டைகளையும் கோதுமை மூட்டைகளையும் பாரசூட்டில் கொண்டுவந்து இறக்குவதாகவும், அவற்றில் பிளேக் கிருமிகள் இருப்பதாகவும் நிபுணர்கள் கண்டு பிடித்துவிட்டதாக ரங்கூன் ரேடியோ அறிவிக்கிறது.

---

### இராக்கில் கலகம் செய்த ரஷீத் அலி

முன்பு இராக்கில் கலகம் செய்த ரஷீத் அலியும், அவருடைய சர்க்காரில் இருந்த இருவரும், பாக்தாத்தில் கூடிய ஒரு ராணுவக் கோர்ட்டால் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டார்கள் என்று அங்காரா ரேடியோ கூறுகிறது.

ஆனால் ரஷீத் அலி ஜெர்மனியிலேயே இருப்பதாகத் தெரிகிறது. கிருஸ்துமசுக்கு முன்பு அவரை ரிப்பன்டிராப் வரவேற்றார்.

---

தேள்கள் ஆகாரமின்றிப் பல மாதங்கள் ஜீவித்திருக்கும் சக்தி வாய்ந்தவை.

---

## நோட்டீஸ்

### சிவகெங்கை சப் கோர்ட்டு

1935௵ O. S. நெ 28.

செ. சி. நா. ராம. ராமநாதன் செட்டியார் வகையரு } வாதிகள்

ராமசாமி செட்டியார் வகையரு } பிரதிவாதிகள்

இந்த நிம்பர் பிராதிலும், பிரிலிமினரி டிக்கிரியிலும் A I ஷெடியூல் 7, 8, 10 லக்கங்களைக் கொண்டதும் வாதிகளின் தகப்பனுர் லேட் செ. சி. நா. ராம. ராமநாதன் செட்டியாரின் எஸ்டேட்டுக்குப் பாத்தியமானதுமான (all the right, title and interst) கண்டரமாணிக்கத்திலுள்ள சொத்துக்களை 8-2-1942 பகல் 9மணி முதல் இதனடியில் கையொப்பமிட்டவரால் சிவகங்கையில் ஷியார் ஆபீசில் பகிரங்கமாக ஏலம் போடப்படும். ஏலக் கண்டிஷன்களும் இதர விஷயங்களும் ஷியாரிடம் கிடைக்கும்.

N. B: ஷெ 7, 8 லக்க சொத்துக்களில் சில பாகம் A. V. S. சாத்தப்ப செட்டியாருக்கு பாத்திய மென்று I. A. 384 of 1939லும் 8-வது லக்க சொத்தில் ஒரு பாகம் மைனர் கருப்பன் செட்டியாருக்கு பாத்திய மென்று I. A. 385 of 1939-லும் 10 வது லக்க சொத்து L. A. கருப்பய்யா அம்பலத்துக்கு பாத்தியமென்று I. A. 383 of 1939-லும் ஷியார்கள் பாத்தியம் கொண்டாடுகிறார்களென்று இதன் மூலம் அறிவித்திருக்கிறது.

D. ராமநாதய்யர்
வக்கீல், அட்மினிஸ்டிரேட்டர்,
சிவகெங்கை } O. S. 28 of 1935.
5—1—42 } சிவகெங்கை சப்கோர்ட்டு.

## அமெரிக்காவில் தளவாட உற்பத்தி

### எதிரிகளை முறியடிக்க ரூஸ்வெல்டின் திட்டம்

*யுத்த தளவாட உற்பத்தித் திட்டம் சம்பந்தமாக யுனைடெட் ஸ்டேட்ஸ் தலைவர் ரூஸ்வெல்ட் காங்கிரசுக்குச் செய்த பிரசங்கத்தில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—*

1942ம் வருஷத்தில் 60,000 விமானங்களையும், 45,000 டாங்குகளையும், 20,000 விமான எதிர்ப்பு பீரங்கிகளையும் மொத்தம் 80 லட்சம் டன் எடையுள்ள கப்பல்களையும் யுனைடெட் ஸ்டேட்ஸ் தயாரிக்கும். 1943-ல் 125,000 விமானங்களும் 75,000 டாங்குகளும், 35,000 விமான எதிர்ப்பு பீரங்கிகளும், மொத்தம் ஒரு கோடி டன் எடையுள்ள கப்பல்களும் தயாரிக்கப்படும். வரும் வருஷத்தில் யுனைடெட் ஸ்டேட்ஸின் யுத்த காரியங்களுக்கு மொத்தம் 5,600 கோடி டாலர் செலவாகும். ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் இவைகளைக் கொண்ட ராணுவ பலத்தைப் பூரணமாக முறியடித்து, நாசம் செய்த பிறகே யுத்தம் முடியும். நேச தேசங்கள் அடிவாங்கத் தயார்; ஆனால் பின்னர் அவை பலமாகத் திருப்பிக் கொடுப்பதும் நிச்சயம்.

அமெரிக்க, நில, விமான, கடற்படைகள் பிரிட்டனுக்கும் சென்று அங்கிருந்தும் போராடும். எதிரிகள் எங்கிருந்தாலும் சரி, அங்கு நேசதேசப் படைகள் போர் செய்யும். எதிரிகளுடன் எக்காலமும் சமரச மில்லை.

யுத்தத்தில் வெற்றி பெறுவது மட்டும் நம் நோக்கமல்ல; வெற்றிக்குப் பிறகு ஏற்படும் சமாதானம் அழியாதிருக்கும்படியும் செய்ய வேண்டும்.

### அமெரிக்க வரவு செலவு

ரூஸ்வெல்ட் தமது செய்தியில் அடுத்த வருஷ வரவு செலவுகளைப்பற்றியும் குறிப்பிட்டிருக்கிறார். தற்போது வரிகள் மூலம் சர்க்காருக்கு 600 கோடி டாலர் கிடைக்கிறது. அடுத்த வருஷம் இது 1800 கோடி டாலராக்கப்படும். 1943ல் 700 கோடி டாலர் அதிகமாக வரிவிதிக்க வேண்டியிருக்கும். வருமான வரியை உயர்த்துவது, அதிக லாப வரி விதிப்பது முதலியன கையாளப்படலாம். சம்பளவரி, கலால் வரி முதலியவற்றிலும் மாறுதல் ஏற்படலாம்.

1940ல் 300 கோடி டாலராயிருந்த சர்க்கார் கடன் 3 வருஷத்தில் 11,000 கோடி டாலராகலாம். சர்க்கார் கடனுக்காக இப்போது 100 கோடி டாலர் வட்டி கொடுக்கப்படுகிறது. 1943ல் இது 250 கோடியாகும்.

## ஹாங்காங் எதிரிப் பிரதேசம்

இந்தியப் பாதுகாப்புச் சட்டப்படி ஹாங்காம் எதிரிப் பிரதேச மென்றும், அதனோடு வர்த்தகம் செய்யக்கூடா தென்றும், ரிசர்வ் பாங்கு அனுமதியின்றி அங்கிருந்து டாலர் நோட்டுகள் கொண்டு வரக் கூடாதென்றும் இந்திய சர்க்கார் தெரிவித்திருக்கின்றனர்.

## ஸர் அக்பர் ஹைதரி காலமானர்

இந்திய சர்க்கார் விளம்பர இலாகா மெம்பர் ஸர் அக்பர் ஹைதரி ஜனவரி 8-ந் தேதி மாலை புதிய டில்லியில் காலமானர். அவர் சுமார் 17 நாட்கள் ஸ்மரணையற்றுப் படுத்த படுக்கையாக விருந்தார். அவரது பிரேதம் ஹைதராபாத்துக்குக் கொண்டு போகப்பட்டு அடக்கம் செய்யப்பட்டது.

ஸர் அக்பர் ஹைதரி 1869ல் பிறந்தார். 1905 லிருந்து 17 வருஷங்களுக்கு நிஜாம் அரசாங்கத்தில் பொக்கிஷ இலாகா காரியதரிசியாக வேலைபார்த்தார். 1938-1941 வரை நிஜாம் ராஜ்யத்தில் நிர்வாக சபைத் தலைவராக இருந்தார். தமது 72வது வயதில் வைஸ்ராய் நிர்வாக சபையில் விளம்பர இலாகா மெம்பராக நியமிக்கப்பட்டார். அவரது சிறந்த குணங்களையும், தேசிய ஊழியத்தையும் பாராட்டி ஹைதராபாத் நிஜாம் ஒரு பத்திரிகையில் கட்டுரையும் சரம கவியும் எழுதியிருக்கின்றார்.

தேசத்தலைவர்கள் பலரும் இந்திய சர்க்காரும் அவரது மரணத்தைக் குறித்து அனுதாபந் தெரிவித்திருக்கின்றனர்.

## இந்தியா முன்னேருத தேன்?

### பிரிட்டிஷ் ஆட்சிக்கு அமெரிக்கர் சாட்டை

"யுனைடெட் ஸ்டேட்ஸ் என்ற நமது அமெரிக்க அரசாங்கம் ஏற்படுவதற்கு ஒரு தலைமுறைக்கு முந்தியே ஏற்பட்ட அரசாங்கம் பிரிட்டிஷ் இந்தியா என்பது. ஆனாலும் இந்தியர் முன்னேற்ற மடையவில்லை!" என்று 'எட்கார் ஸ்நோ' என்ற அமெரிக்கப் பத்திரிகைக்காரர் தமது புதுப் புத்தகத்தில் எழுதியிருக்கிறார். மேலும் அவர் எழுதுவதாவது:—

இந்த 180 வருஷ காலம் பிரிட்டிஷார் ஆட்சி நடத்தியிருக்கும் இந்திய ஜனங்களிலே 100-க்கு 93 பேருக்கு எழுத்து வாசனை கிடையாது.

ஆனால் பிலிப்பைன் தீவுகளின் ஆட்சியை அமெரிக்கர் ஏற்று 40 வருஷங்களே ஆயிற்று; 100-க்கு 91 பேர் எழுத்தறிவற்று அந்த தேசத்திலிருந்ததை, 100க்கு 55 பேர் கல்வியுடையவர்களாக ஆக்கினர்கள். எந்தக் காலனியிலும் எந்த அரசாங்கமும் இவ்வளவு அபிவிர்த்தி செய்ததேயில்லை.

அடுத்தாற்போல ரஷியாவின் கதை. ஸோவியத் அரசாங்கம் ஏற்படுவதற்கு முந்தி 100-க்கு 78 பேருக்கு அந்நாட்டிலே படிக்கத் தெரியாதிருந்தது. சென்ற இருபது வருஷத்துக்குள்ளே 100-க்கு 92 பேர் எழுத்தறிவுடையவர்களாக ஆக்கிற்று ஸோவியத் அரசாங்கம்.

இந்தியாவிலும் ஸோவியத் ரஷியாவிலும் கல்வி போதனை எவ்வாறிருக்கிறதென்று பார்ப்போம். 1937-ம் வருஷத்திலே மட்டும் தொழிற் கல்வி, விவசாயக் கல்வி போதிக்கும் கலாசாலைகளில் பயின்று வந்த என்ஜினீயரிங் மாணவர்கள் ரஷியாவிலே 45900. ஆனால் ரஷியாவைப் போல இரு மடங்கு ஜனத் தொகையையுடைய இந்தியாவிலே அதே வருஷத்தில் என்ஜினியரிங் கலாசாலைகளில் பட்டம் பெற்று வெளிவந்தவர்கள் 906 பேர் தான்!



# நோட்டீஸ்

## சிவகெங்கை டி. மு. கோர்ட்டு

### 1941ளு O. S. No. 262

மைனர் Sri D. ஷண்முகராஜா அவர்கள் சிவகெங்கை ஜமீந்தார் } வாதி

உப்பிலாம்பட்டி ஒ. சாமிநாதன் } பிரதிவாதி

வடமாம்பட்டி கிராமத்தில் வாதிக்கு பாத்தியமான S. No. 21/12 செண்டு 68 நிலத்தில் பிரதிவாதியின் அக்கிரமப் பிரவேசத்தை நிவர்த்தி பண்ணி சுவாதீனம் பெறவும் 1347 to 1349 பசலிகளுக்கு நஷ்டி ரூ. 55-15-10 யும் வரப்பற்றவும் பிரதிவாதி பேரில் பிராது செய்து வாயிதா 1942ளு ஜனவரிமீ 20வ ஏற்பட்டிருக்கிறது. ஆக்ஷேபனை இருந்தால் ஷை தேதி பகல் 10 மணிக்கு ஷை கோர்ட்டில் பிரதிவாதி தெரிவித்துக் கொள்ளலாம்.

சிவகெங்கை, 4-1-1942. } ஜி. பாலகிருஷ்ணய்யர், வாதி வக்கீல்.

## அந்தமானிலிருந்து வெளியேற்றம்

அந்தமானிலிருந்து சுமார் 186 பெண்களும், 250 குழந்தைகளும், சில புருஷர்களும் சென்ற வாரம் கல்கத்தா வந்து சேர்ந்தனர்.

## ஹிந்து சர்வகலாசாலை வெள்ளி விழா

காசி ஹிந்து சர்வ கலாசாலையின் வெள்ளி விழா ஜனவரி 21-ந்தேதி கொண்டாடப்படும். அவ்வமயம் மகாத்மா காந்தி, பண்டித ஜவாஹர் முதலிய தலைவர்களும், சமஸ்தான மன்னர்கள் பலரும் அங்கு விஜயஞ் செய்வார்கள்.

## புதுவயல் ஸ்ரீ சரஸ்வதி சங்கம்

இச்சங்கத்தின் மாதக் கூட்டம் மார்கழித் திங்கள் 26-ம் நாள் வெள்ளிக்கிழமை மாலை 5-30 மணிக்கு திரு. V. R. இராமனுதன் செட்டியார் M. Sc. அவர்கள் தலைமையில் நடைபெற்றது. ஸ்ரீ சரஸ்வதி வித்தியாசாலை மாணவ மாணவிகளின் பாட்டு பேச்சு நடைபெற்றதும், சித. வயி. சிதம்பரம் செட்டியாரவர்கள் சொற்பொழிவு நிகழ்த்திய பின் தலைவரவர்களின் முடிப்புரையுடன் வந்தன வாழ்த்துக் கூறப்பெற்றுக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

## இலங்கை இந்தியர் காங்கிரஸ்

இலங்கை கம்பளை ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் 1940—41ளு அறிக்கை வெளியாகியிருக்கிறது. இதன் தலைவர் திரு. வயி.கரு. சௌமியமூர்த்தித் தொண்டைமான். காரியதரிசிகள்: திரு வ. சாத்தப்ப செட்டியாரும், திரு. மு. ராமசுப்பிரமணியமும். மொத்த அங்கத்தினர் தொகை 6586. பல இடங்களில் கமிட்டி பிரசாரக் கூட்டங்கள் நடத்தி யிருக்கிறது. 8-5-41ல் இலங்கை அரசாங்க சபையில் இலங்கையரல்லாதாரைப் பதிவு செய்யவும், குடியேற்றத்தைக் கட்டுப்படுத்தவும் இரண்டாம் முறையாக நிறைவேறிய இரு மசோதாக்களையும் இக் கமிட்டி கண்டித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றியது. இந்தியா இலங்கை உறவு சம்பந்தமான நகல் ஒப்பந்தத்தையும் கண்டித்தது. தொழிலாளர் விஷயங்களில் கவனஞ் செலுத்தி அவர்கட்கு உதவியளித்திருக்கிறது. பிரசித்தி பெற்ற டெல்டா வழக்கில், குற்றம் சாட்டப்பட்ட தொழிலாளர்க்காகக் கமிட்டி தன் செலவில் வக்கீலை அமர்த்தி சாமர்த்தியமாக வழக்கை நடத்தியது. முன் வருஷ இருப்பு ரூ. 177-54 சதம் உள்பட மொத்த வரவு ரூ. 4083, சதம் 7. செலவு ரூ. 3888, சதம் 41. நீக்கி இருப்பு ரூ. 194 சதம் 66. மொத்தத்தில் இக் கமிட்டி பிரஸ்தாப வருஷத்தில் நல்ல வேலை செய்திருக்கிறது.

Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi (S.INDIA)

